# எடிபஸ் வேந்தன்

## கிரேக்க நாடகம்

ஸாஃபக்லீஸ்

தமிழாக்கம் :
கே. எஸ். வேங்கடராமன்



சாகித்திய அக்காதெமி
புது தில்லி

OEDIPUS VENDAN. This translation into Tamil by K. S. Venkataraman of Sophocles' *Oedipus Tyrannus* is published by Sahitya Akademi with the assistance of UNESCO as part of Unesco's Major Project for furthering mutual appreciation of Eastern and Western cultural values.



*Price Rs.* **3·50**

*Available at*

Sahitya Akademi
Rabindra Bhavan, New Delhi-1
Regional Office, Madras-34
Regional Office, Calcutta-29

அச்சிட்டோர் :

கபீர் பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை–5

விலை ரூ. 3·50

ஸாஃபக்லீஸ் எழுதிய எடிபஸ் வேந்தன். தமிழாக்கம்: கே. எஸ். வேங்கடராமன். கீழ்நாட்டு மேல்நாட்டுப் பண்பாடுகளைப் பரஸ்பரம் அறிமுகம் செய்வதற்காக யுனெஸ்கோ மேற்கொண்டுள்ள பெருந் திட்டத்தின் ஒரு பணியாக இந்நூல் யுனெஸ்கோ உதவியுடன் சாகித்திய அக்காதெமியால் வெளியிடப் பெறுகிறது.

# கிரேக்க நாடகங்கள்

## எச். டி. எஸ். கிட்டோ

கிரேக்க நாடகம், 'ஏதன்ஸ்' நகரம் ஒன்றையே சார்ந்த படைப்பாகும். நாடகம் என்பது, அவல நாடகம், கேலிச் சித்திர நாடகம், நகைச்சுவை நாடகம் என்ற மூன்று வகைகளில் உருக் கொண்டிருந்தது. இவற்றில் கேலிச் சித்திர நாடகம் வழக் கிறந்து விட்டதென்றே சொல்லலாம். இம் மூன்று வகைகளுக் கும் பொதுவான அம்சங்கள் எவையெனில்: இவை, ஏதன்ஸ் நகரில் மட்டிலுமே நடிக்கப்பெற்றன; 'டையோனிஸஸ்' தேவ னின் ஆண்டுவிழாக் கொண்டாட்டங்களில் ஒரே ஒரு முறை நிகழ்வன; ஒவ்வொரு நாடக வகையிலும் நடிகர்களும், இசை நடனக் குழுவினரும் சேர்ந்தே பங்கெடுத்துக் கொண்டனர்; நாடக பாணியில் அமைந்த செய்யுள் நடையில் நடிகர்கள் பேசினர்; இசைக்குழுவினர், நடனத்திற்குரிய செய்யுள் நடை யைக் கையாண்டனர், என்பவையாம். இந்த முப்பிரிவு நாடக வகை களுக்கிடையே உள்ள மாறுபாடுகள் யாவையெனின்: வரன்முறையில் கைவரப்பெற்ற கற்பனைக் கதைகளிலிருந்து தேர்ந்தெடுத்த ஆழ்ந்த கருத்துக்கள் செறிந்த செய்திகளைக் கொண்டு அவல நாடகம் உருவாயிற்று;—சமீபகாலச் சரித்திர நிகழ்ச்சிகளைப் புகுத்துவது மிக அரிது. கேலிச் சித்திர நாடக வகையும் பண்டைக்கால கற்பனைக் கதைகளைச் சார்ந்தே யிருக் கும்; ஆயின் அது அவற்றை வெறும் வேடிக்கை நிகழ்ச்சிகளாகச் சித்திரிக்கும் பரிகாசக் கூத்தாகவும் கூடக் கையாளும். நகைச் சுவை நாடகமோ, புதிதான கதைக்கோப்பை உருவாக்கிக் கொள்ளும்; அவ்வக்காலங்களில் நிலவும் அரசியல் துறையி லிருந்தோ, சமூக வட்டத்திலிருந்தோ, அறிவு உலகிலிருந்தோ தனக்குத் தேவையான பொருள்களைத் திரட்டிக்கொள்ளும். விசித்திரமான கற்பனை, நையாண்டிச் சித்திரம், அவ்வக்காலத்து நகரவாழ்க்கை பற்றிய குதர்க்கமான விமரிசனம், பாங்கற்ற வற்றையும் சுவைபடக் கூறுதல், இவையாவும் குழைந்து கலந்து களிப்பூட்டுவதே நகைச்சுவை நாடகத்தின் உருவமாகும்.

அவல நாடகம் எப்பொழுது தோன்றியது என்பதைப் பற்றித் தெளிவாக அறிந்திலம்; அப்படி அறியாததில் இழுக்கொன்றுமில்லை. 'டையோனிஸஸ்' தேவனைச் சார்ந்த சடங்கு போன்ற ஒன்றிலிருந்தே அது தோன்றியது என்று கருதுவது தவறுதல் கூடும். முதலில் குழுப்பாட்டு முறையிலேயே அமைந்திருந்த அவல நாடகத்தில் நடிப்புத்திறனும் பிறகு புகுத்தப் பட்டது. வரம்பு கடந்த உணர்ச்சியுடன் டையோனிஸஸ்ஸின் பெருமையைப் போற்றுவதற்குரிய இசை உருவம் இந்த நாடகக் குழுப்பாட்டில் தோய்ந்து நின்றது. ஐம்பது பேர் கூடி இந்தப் பாட்டை முழங்குவது வழக்காயிருந்தது. இந்த அவல நாடக வளர்ச்சிப்படியில் அமைந்த பொருள்கள் டையோனிஸஸ் தேவனைச் சார்ந்தவை மட்டுமல்ல. இந்தத் தேவனை வழுத்திப் பாராட்டும் திருவிழாக்களில் அவல நாடகம் நடிக்கப் பெற்றதென்ற காரணம் கொண்டு அவனை வழிபடுதலிலிருந்தே இது எழுந்ததென்று சொல்வதிற்கில்லை. வேறு விளக்கங்கள் தரவும் இயலும். ஆனாலும் நறவுத்தேவனும் டையோனிஸஸுக்குரிய களிப்பு வடிவத்திற்கும் நகைச்சுவை, நையாண்டி நாடக வகைகளுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பது திண்ணம்.

அறிவொளி சிறந்து ஆட்சிபுரிந்த 'பீயிஸிஸ் திரேடஸ்' என்பவன் டையோனிஸஸ் திருவிழா நிகழ்ச்சிகளில்புதுக்கலையாம் அவல நாடகத்தை கி. மு. 535ஆம் ஆண்டில் புகுத்தினன். அதற்கு ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு நகைச்சுவை நாடகமும் ஆட்சி மன்றத்திலே இதே சிறப்பிடம் பெற்றது. அவல நாடகத்தின் கடுந்தன்மையைச் சற்றுத் தணிக்கும் நோக்கம் கொண்டு நையாண்டி நாடகத்தைச் சில சமயங்களில் அதில் நுழைப்பார்கள். இதன் பொருட்டு, கின்னர உருவம் கொண்ட இசைக் குழுவினர் அதில் பங்கு கொள்வார்கள். கால வெள்ளத்தை எதிர்த்து நின்ற அவல நாடகங்கள் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்;—கொடுங்கோன்மை வீழ்ச்சியடைந்து குடியரசு ஓங்கியெழுந்த காலப்பகுதி அது. ஈஸ்கிலஸ், ஸாஃபக்லீஸ் யூரிபிடீஸ் என்னும் புலவர்கள் இயற்றிய நாடகங்களில் சில இன்னமும் உயிர்த்திருக்கின்றன; வேறு கவிஞர்கள் புனைந்த நாடகங்கள் யாவும் மறைந்தொழிந்தன. அரிஸ்டோபனீஸின் நாடகங்கள் அனைத்தும் மட்டிலுமே நாம் கிடைக்கப் பெற்றுள்ளோம்; கி. மு. 425க்கும் 388க்கும் இடையே படைக்கப்பட்டவை இவை. கி. மு. 342க்கும் 292க்கும் இடையில் மினண்டர்

என்னும் கவிஞர் சமைத்த நான்கு நாடகங்கள் சிதையாமல் நிலேத்து நிற்கின்றன.

பகட்டான ஒரு திருவிழாவின் அங்கமாக அத்தீனிய நாடகம் நடிக்கப்பெற்று வந்ததென்பதை முக்கியமாக நாம் கருத்தில் கொள்ளவேண்டும். இந்த நாடகங்களுக்கு விளக்கம் தருவது இந்த உண்மையே. இவற்றைப் பார்த்துச் சுவைக்கிறவர்களின் கூட்டம் மிகப் பெரிதாக இருக்கும்—சுமார் 15,000 பேருக்குக் குறைவிராது எனலாம். அத்தீனிய நகர மாந்தர் ஏறக்குறைய அனைவருமே அங்குக் குழுமியிருந்தனர் என்று கூறுதல் பொருந்தும். நாட்டின் நன்மை தீமைகளைச் சீர்தூக்கிப் பார்த்து முடிவு காணும் பொருட்டுப் பேரவையில் கூடும் மக்களேயாதலின் பழுத்த அனுபவம் வாய்ந்து ஒருங்கு குழுமியவர்களாவர். எனவே, துருவிப்பார்க்கும் திறனும் நுண்ணறிவும் வாய்ந்தோர் இவர்கள் என்பது அவல நாடகம் இயற்றும் புலவருக்குச் சொல்லாமலே விளங்கும். நகைச்சுவைக் கவிஞர் தம் நாடகங்களில் அவல நாடகக் கவிஞர்களை நையாண்டி செய்வதோடன்றியும் அக்காலத்தில் நிலவும் நிகழ்ச்சிகளையும் அரசியல் சார்பான பொருள்களையும் சித்திரிக்கும் முறையில் வசைக்கவியில் திளைக்கக் கூடும்.

அவல நாடகம் புறவடிவில் கடுமையாக வரையறைப்பட்டே யிருக்கும் ; உள்ளத்தை உள்ளவாறு உணர்த்தும் இயல்பு இதில் காண்பது மிக அரிது. எனினும், இந்த வரையறுப்பு, அவல நாடக உணர்ச்சியின் இறுகிய தன்மைக்கு முரண்பட்டதாய் இராது. இதில் நாடகப் பாத்திரங்கள் மிகக் குறைவே. ஒருவரைக் கொண்டே நடத்தலாம் ; இருவரும் மூவரும் பங்கு கொள்ளலாம் ; ஒரே நடிகன் பல பாத்திரங்களை வகிக்கலாம். உரையாடல் பண்டைய மரபை ஒட்டியே யிருக்கும். இது, நீண்ட சொற்பொழிவாகவும் அமையலாம் ; மொழிக்கு மொழி விடை பகரும் வகையில் இருத்தலும் கூடும். நாட்டின் 'மாண்பு 'சிதைந்து போன நிலைமைக்கு வரும் வரையில், விரிந்த நாடக சாலையில் நடன ।அரங்கு எப்படி அவையோர்களின் உள்ளத்தைக் கவர்ந்ததோ அதுவே போல் குழுவின் இசைதான் நாடகத்தின் நடு நாயகமாய்த் திகழ்ந்து அவர்களுடைய உணர்ச்சியை ஈர்த்தது. வழிவழி வந்த பண்டைய கதைகளிலிருந்தும் தம் நாடகத்திற்குரிய பொருள்களை அவல நாடக ஆசிரியர் திரட்டிக்கொண்ட போதிலும் சில கூறுகளில் அவற்றைத் தம் கற்பனைக்கேற்றவாறு அவர் திருத்தி அமைப்பதும் உண்டு. நகைச்சுவைப் புலவர்களும் தம்

கற்பனைகளுக்கேற்றவாறு அந்தக் கதைகளை நையாண்டி செய்யும் வகையில் புனைவதுமுண்டு.

ஒரு தெய்வத்தைச் சிறப்பித்துக் கொண்டாடும் முறையில் இந்தத் திருவிழா நிகழ்ந்த போதிலும், நேர்முகமாகவோ மறைமுகமாகவோ தெய்வங்கள் பலதடவைகளில் கலந்து கொள்ளும் வகையில் நாடகங்கள் அமைந்திருந்த போதிலும், விழா நிகழ்ச்சி ஒரு சமய வழிபாட்டைச் சார்ந்ததெனச் சொல்வதிற்கில்லை. சமய வழிபாடு என்றால் புனிதமான ஓர் இடத்தில் ஒரு தெய்வத்தை உள் உணர்ச்சியுடன் போற்றித் துதிப்பதாகுமன்றோ? எனவே இந்த விழா அந்த வகையைச் சாராது. உதாரணமாக, 'தவளைகள்' என்னும் நாடகத்திற்கும் சமய வழிபாட்டிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஆனாலோ, அக்காலத்து அவலநாடகம் என்பது தற்காலம் நடைபெறுவதுபோல வெறுமையான வாழ்க்கைச் சித்திரமன்று. மக்கட் சமுதாயத்தைச் சார்ந்த சிக்கல்கள், பிணக்குகள் ஆகியவற்றின் ஏதோ சில முக்கிய அம்சங்கள் அதில் காணப்படுமெனினும் அவற்றை விரிவாக எடுத்துக்காட்டும் வகையில் அமைந்ததாகாது. 'ஆன்டிகனீ' என்னும் நாடகம் கூட, தனியொருவனுடைய மனச்சாட்சிக்கும் அரச ஆணைக்குமிடையே எழுந்த முரண்பாட்டை மட்டில் குறிப்பாகச் சுட்டும் வகையாகாது; இதனினும் எவ்வளவோ ஆழ்ந்த கொள்கையை வலியுறுத்துவதாகும். அக்காலத்து அரசியல் வாழ்க்கையையோ சமூக வாழ்க்கையையோ நிலைக்களனாகக் கொள்ளாமல் எக்காலத்தும் மாறாத நியதிகளையும் நிபந்தனைகளையும் கொண்டவாழ்வைச் சித்திரிக்கின்ற காரணத்தால் ஒருவாறு அது சமயச் சார்புடையதெனக் கருதுதல் கூடும். இந்த நியதி நிபந்தனைகளுக்கு நாடக வாயிலாக உருக்கொடுக்கும் பொருட்டே தெய்வங்கள் புகுத்தப்பட்டன. இந்தத் தெய்வ நெறிகளை எதிர்த்து 'க்ரியான்' போன்ற அவல நாடக பாத்திரங்கள் வீணே போராடுகின்றன.

'அகமெம்னன்' என்ற நாடகம் தனிப்பட்ட ஒரு படைப்பன்று; 'அகமெம்னன்', 'கிளைடெம்னெஸ்திரா', 'ஓரஸ்டீஸ்' என்னும் முத்தொடர் நாடகங்களில் அது ஒன்றாகும். 'எஸ்கிலஸ்' என்னும் புலவர் இயற்றிய தம் நாடகங்களுக்கு, தவறு செய்தலும் தண்டனையும் என்ற பிரச்சினையை முக்கிய பொருளாகக் கொண்டார். பிழைக்கு மாற்றுப் பிழையே என்ற நிலையான சித்தாந்தத்தைத் தழுவி நிற்கிறது இந்தப் பிரச்சினை. கொடுமையிலிருந்து கொடுமைதான் பிறக்கும்; இதன் விளைவு மாபெருங் குழப்பமேயாகும்.

ஒன்றின்பின் ஒன்ருகத் திளைத்தெழும் தீச் செயல்களை 'அகமெம்னன்' நாடகம் நம் முன் விரியச் செய்கின்றது. இந்த ஒவ்வொரு வெவ்வினைக்கும் உடனடியாகவே கடுமையான எதிரடி யும் விழுந்து கொண்டே யிருக்கும். கொடுமைக்குக் கொடுமை புரியும் இத்தகைய முறையை மானிடரேயன்றி விண்ணேரும் கையாண்டனர். இளவரசன் 'பாரிஸ்' மீது பழிக்குப்பழி வாங் கும்பொருட்டு அகமெம்னன் போர் தொடுக்கின்ருன். இதுவும், தெய்வநாதன் ஜ்ஊஸ் செய்த சூழ்ச்சியின் திட்டமேயாகும். இஃது இவ்வாருக, செருக்களத்தில் அகமெம்னன் சிந்தப் போகும் இரத்தப் பெருக்கைக் குறித்து வெகுண்ட தெய்வ நங்கை 'ஆர்டெமிஸ்', அத் தீவினைக்கு எதிரீடாக அவனுடைய உதிரத்தில் உதித்தவளையே பலி கேட்கின்ருள். எந்த ஒரு செயலைத் தெய்வ அருள் கொண்டு அகமெம்னன் ஆற்ற முனைந்தானே அதே செய லுக்குத் தெய்வ தண்டனையும் அவனுக்கு விதிக்கப்படுவதை நோக்கும்போது, பழிக்குப்பழி வாங்குவதே நியாயமெனக் கருதிய பண்பாடற்ற கொள்கையில், பரிகாரம் காண்பதற்கரிய முரண்பாடு இயல்பாகவே அமைந்திருப்பது புலனுகிறது. இந்தக் கொள்கைக்கு அவதியேயில்லை போலும்! இந்தக் கொள்கைக்கு ஏற்றவாறே, நெறி பிறழ்ந்த 'கிளைடெம்னெஸ்திரா' தன் மகள் கொலையுண்ட பழிக்குப் பழி வாங்க, தன் கணவன் அகமெம்னனையே மாய்க்கின்ருள். ஒருகால் இவள் மாய்க்கா திருப்பினும், திராய்ப் போர்க்களத்தில் உயிரைக் கொடுத்த கணக் கற்ற கிரேக்க மக்களின் சார்பாக வஞ்சம் தீர்க்கும் வகையில் வேறெவரேனும் அகமெம்னனைக் கொன்றிருத்தலும் கூடும் என்பது சூசனையாகக் காணப்படுகிறது. பிறர்மனை நாடும் ஒரு வெறுங்கோழை, 'ஈஜிஸ்தஸ்', வஞ்சம் தீர்க்கத் துணிந்த கிளைடெம்னெஸ்திராவுக்குத் துணை புரிகிருன். இதற்கு முன் நிகழ்ந்த அக்கிரமச் செயல்களைத் தொடர்ந்தே நிற்கிறது இவ னுடைய இழிசெயல். இவனுடைய தந்தை 'தையெஸ்டீஸ்' தன் உடன்பிறந்தான் அத்ரீயஸின் மனைவியைக் கற்பழித்தான். சினங்கொண்டு வஞ்சம் தீர்க்க முனைந்த அத்ரீயஸ், தையெஸ்டீ ஸின் குழந்தைகளைக் கொன்று அவற்றின் இறைச்சியையே அவ னுக்கு விருந்துணவாகப் படைத்தான். இவ்வகைகளில் பழிக்குப் பழி வாங்கும் கொடிய உணர்ச்சி, அத்ரீயஸ் மன்னர் குலத்திற்கே ஒரு சாபக்கேடாய் அமைந்தது போலும். பிணக்கை யூட்டும் 'எரிநியீஸ்' போன்ற நச்சுக்கொண்டை கன்னிப்பேய்கள், தெய் வங்களுக்குமே கருவிகளாய் இயங்குவதை இந்நாடகத்தில் பார்க்

கின்றோம். அத்திரியஸ் அரண்மனையை இந்தப் பேய் தெய்வக் கன்னிகைகளுக்கு உறைவிடம் என்றே சொல்லலாம். அப் போலோ தெய்வம், மங்கை 'கஸாண்டிரா' மீது வஞ்சம் தீர்ப் பதற்கு இந்த அரண்மனையையே தனது கொலைக்களனகச் செய்துவிட்டது. இந்தக் கொடுஞ் செயல்களெல்லாம் ஒரு கசப் பான குழப்பத்திலேயே கொண்டுபோய் விடுகின்றன என்பதை நாடகாசிரியர் 'எஸ்கிலஸ்' உருவகப்படுத்திக் காட்டி யிருக் கின்றார். இதுவே போல், புலவர் ஷேக்ஸ்பியரும், மன்னர்கள் கொலை, முடி பறித்தல், கொடுங்கோன்மை போன்ற அம்சங்களைத் தம் நாடகங்களில் புகுத்தி யிருப்பதை யறிவோம். எது நியாயம் என்பதைப் பற்றிய கருத்து, மனிதர்களிடத்திலும் தெய்வங் களிடத்திலும் ஓரளவு ஒப்புக் கொள்ளும் வகையில் மெல்ல மெல்ல வளர்ந்து வருவதையும் ஒழுங்கான ஆட்சி முறை நிலவுவதையும் பண்புற்ற குடியாட்சி நகரங்களில் மனக்கோட்டமின்றி நீதிமன் றங்கள் நிறுவப்படுவதையும் இந்த முத்தொடர் நாடகங்களின் பிற்பகுதிகள் சித்திரிப்பதைக் காண்கின்றோம். மன்னுயிரிடத்தே நியாயம் என்பது சீற்றத்தையோ கொடுமையையோ அடிப்படை யாகக் கொள்ளாமல், பகுத்தறிவிலிருந்தே எழுவதாகும் என்ற உண்மைக்கு ஆசிரியர் 'எஸ்கிலஸ்' தம் நாடகங்களில் உருக் கொடுக்கின்றார்.

'ஆன்டிகனி' நாடகத்தின் உள்ளுறைக் கருத்தும் ஆழ்ந்த ஆய்வுக்குரியதே. மன்னன் 'க்ரியான்' கரவற்ற உள்ளம் படைத் தவனே; ஆயின் குறுகிய மனப்பான்மையுடையவன்; மனித னில் இயற்கையாய் அமைந்திருக்கும் புனிதமான உணர்ச்சிகளைப் புறக்கணித்தவன் என்று சொல்லலாம். இத்தகைய இயற்கை உணர்ச்சிகளையே, தெய்வ நியதிகள் என்று கிரேக்கப் புலவர்கள் கூறுகின்றனர். தன் உடன் பிறந்தானிடம் 'ஆன்டிகனீ' கொண்ட அன்பு, அவளுக்கிருந்த குடும்ப விசுவாசம், உயிர்நீத்த உற்றார் சடலத்திற்கு மக்கள் செலுத்த வேண்டிய மரியாதை, ஆன்டிகனீயிடம் ஹேமான் பாராட்டிய கனிவு—இவ்வுணர்ச்சிக ளெல்லாம் அலட்சியப்படுத்தி உதறித் தள்ளக் கூடியவையே எனக் கருதுகின்றான் க்ரியான். தன்னுடைய செயல் நேர்மை யானதே என்று அவன் எண்ணினாலும் அவனிழைத்த வெவ்வினை களின் அதைப்பு அவனையே தாக்கத் தவறவில்லை; அவனுடைய மகனும் மனைவியும் தற்கொலை செய்து கொள்ளுகிறார்கள்; தான் தோண்டிய படுகுழியில் தானே விழுந்து புரள நேருகின்றது. பொது மக்களுடைய உரிமைகள், அரசியல் நிருவாக நியதிகளைக்

காட்டிலும் மேன்மையானவை என்ற உண்மையை உணர்வதே பகுத்தறிவின் சிறப்பாகும்.

'மீடியா' எனும் நாடகம், முதலில் கழி காதலில் திளைத்துப் பிறகு வெஞ்சினம் கொண்டு வெகுளும் ஒரு மங்கையின் இயல்பைச் சித்திரிப்பதாகும் எனக் கொள்ளுதல் பொருந்தும். ஆயினும் அதைக் காட்டிலும் மிக ஆழ்ந்த கருத்து அதில் பொதிந்துள்ளதைக் காண்போம். பரந்து விரிந்த நாடக அரங்கின்முன் குழுமும் அதீனிய மக்கள், தாம் காணும் காட்சி, கலைநுகர்ச்சிக்கு இனிமையும் அறிவுக்கு உணவுமாய் மட்டிலுமே உதவுவதாகும் என்று உணரும் காலம் சேய்மையிலில்லை. இந்நாடகத்தை ஒரு குணசித்திர விளக்கமாய்க்கொள்வது அறிவின்மையாகும். எப்படியெனில், பரிதித்தேவன் தன் மாயக் குதிரையுடன் இடையிடுவதைக் காணும்போது, நாடக நிகழ்ச்சியை முடிவு கட்டுவதன் பொருட்டுக் கையாண்ட ஒரு செயற்கை உபாயமே இது என்பது தெள்ளிதின் விளங்கும். புலவர் 'யூரிபிடீஸ்' இயற்றிய நாடகத்திலும் தெய்வங்கள் தலையிடுவதைக் காண்கின்றோம். இவர்களுடைய செயல்கள் பகுத்தறிவுக்கு முரணாகவும் மிகக் குரூரமாயும் அமைந்துள்ளன. 'ஸோபோக்ளீஸ்' தம் நாடகத்தில் இசைக் குழுவினரைக் கொண்டு 'ஆப்ரோடைட்' தெய்வத்தின் பேராற்றலை வழுத்தச் செய்கின்றார். தம் நாடகம் முடிவு பெறுவதற்கு அவர் கையாண்ட உபாயமே இதுவுமாம். தனக்கும் ஆன்டிகனீயிக்கும் தனது தந்தை 'க்ரியான்' இழைத்த பெருந் தீங்கினால் வெகுண்டு வெறிகொண்ட ஹேமான் அவனைக் கொலை செய்யத் துணிகிறான். இங்கும் 'ஆப்ரோடைட்' தெய்வம் தன் சக்தியைப் புலப்படுத்துகின்றது. 'மீடியா' நாடகத்திலும் மற்ற நாடகங்களிலும் 'ஆப்ரோடைட்' தெய்வமும் இதர தெய்வங்களும் வன்மையாக இயங்குவதைப் பார்க்கின்றோம். ஆசிரியர் யூரிபிடீஸ் கருத்தில், ஒன்றுக்கொன்று முரண்பட்டதே மனித உணர்ச்சி—வெறுங் காமமும் தூய்மை ஒழுக்கமும் உணர்ச்சித் துடிப்பும் பகுத்தறிவின் அமைதியும் ஒரு சேரக் கலந்தே மனிதனில் அமைந்துள்ளன; இந்தப் பான்மைகள் ஒன்றுக்கொன்று பொருத்தமாக இசைவுடன் இயங்குமாயின் யாவும் நலமே. அவ்வாறின்றி, உணர்ச்சி வேகம் பகுத்தறிவை இருட்படுத்துமாயின், விளைவு விபரீதமேயாகும். இந்த விளைவு ஒருவரை மட்டில் சார்ந்ததன்று; பல பேர் அந்த விபரீதத்திற்கு இரையாகின்றார்கள். மீடியா படும் கடுந்துயர் உண்மையே; ஆனால், கொலையுண்பவர்கள் அவளுடைய குழந்தைகளும், தீங்கற்ற மணமகளும்

அவளுடைய தந்தையுமேயாவர். மீடியாவோ பரிதித்தேவன் அருளிய தேரில் அமர்ந்து தப்பியோடி விடுகின்றாள். கட்டுக் கடங்காத இயல்பே இங்கு வெற்றி பெறுவதைக் காண்கின்றோம். ஆன்றோர் 'அரிஸ்தோதல்' இயற்றிய 'கவிதை யியல்' என்ற நூலில், 'துயர் செறிந்த அவல நாடகக் கவி' என்று யூரிபிடீஸை அழைக்கின்றார். அவருடைய கருத்து ஏற்கத் தக்கதே. விவேகம், முன் யோசனை, நிதானபுத்தி ஆகிய குணங்கள் ஒருவனிடம் பொருந்தி யிருக்குமாயின் ஓரளவாவது மகிழ்ச்சியுடன் அவன் வாழ முடியும் என்ற உண்மையை, எஸ்கிலிஸூம், ஸாஃபக்லீஸூம் நமக்குப் புலப்படுத்துகிறார்கள். 'யூரிபிடீஸ்' தம்முடைய நாடகங்களில், நிலைகுலைந்த உள்ளம் படைத்த 'மீடியா' போன்ற மங்கையைச் சித்திரித்துக் காட்டுகிறார்; உணர்ச்சி வேகமும் பிழைகளும் மலிந்த எண்ணற்ற கிரேக்க மக்கள் 'ட்ரோஜன்' யுத்தத்தில் ஈடுபட்டுத் தாங்களும் பகைவர்களும் படுநாசத்துக்கு உட்பட்டதை, செருக்களத்தை முக்கியமாகக் கொண்டு அவர் இயற்றிய நாடக வாயிலாக உணர்கின்றோம். ஸாஃபக்ளீஸை விட யூரிபிடீஸ் பதினைந்து வயதே குறைந்தவரானாலும் இவர்கள் ஒரே காலத்தவர்களோ என்று ஐயுறும் அளவுக்கு அவர்களிடையே கருத்து வேறுபாட்டைக் காண்கின்றோம். ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், கிரேக்க தேசம் முழுவதிலும், முக்கியமாக 'ஏதென்ஸ்' நகரத்தில் அறிவொளி ஓங்கி வந்ததெனலாம். ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் அரும்பிய புது மலர்ச்சிக்கு இதை ஒப்பிடலாம். வித்தகர் 'ஸாக்ரடீஸ்' தோன்றியதே இதற்குச் சான்றாகும். அறிவுத் துறையில் எழுந்த இப்புது இயக்கத்தில் நன்மை தீமை இரண்டும் விளைந்தன. ஆர்வம் ததும்பும் சமயச் சார்பான அவல நாடகம் இறந்துபோனது அந்தத் தீமைகளில் ஒன்றாகும். நுணுக்கமாய் ஆராயும் அறிவுதிகழ் சூழ்நிலையில் இத்தகைய நாடகம் நீண்டு நிற்காததில் வியப்பில்லை. இப் புது மலர்ச்சி மக்களின் அறிவைக் கூர்மைப் படுத்தியதே யன்றி அவர்களுடைய பண்பை உயர்த்த வில்லை என்றும், ஆழ்ந்த சமயப்பற்று ஒடுங்கிப் பொருளற்ற சொற்போர்களை வளர்த்ததென்றும், நகர மாந்தரின் ஒற்றுமையையும் தன்னடக்கத்தையும் குலைத்து அவர்களைச் சுயநலமிகளாய் ஆக்கியதென்றும் 'அரிஸ்டோபனீஸ்' போன்ற கிரேக்க அறிஞர்கள் உள்ளூர உணர்ந்தனர். கி. மு. 431ஆம் ஆண்டு, ஏதென்ஸூக்கும் அதன் பண்டைப் பகையான 'ஸ்பார்ட்டா'வுக்குமிடையே ஒரு வெம்போர் விளைந்தது. இருபத்தேழு ஆண்டுகள் இடை

யருது நிகழ்ந்த இக்கடும் போரில் ' ஏதென்ஸ் ' அறவே முறியடிக் கப்பட்டது. யுத்த காலத்தில் சமூகத்தின் நல்லொழுக்கம் சீர் குலேவது இயல்பேயன்றோ! தீயவர்களும், கயவர்களும் அரசியலில் ஆதிக்கம் பெறலாயினர். இந்தச் சீரழிவுக்கு அறிவாளிகளும் அவர்களுடைய செல்வாக்குமே காரணம் என்று குறை கூறுப வரும் உண்டு; இந்தக் கருத்துக்கு அரிஸ்டோபனீஸும் ஓரளவு பரிவு காட்டினர்.

இந்த அறிவுத்துறை இயக்கத்தில் ஸாஃபக்லீஸைக் காட்டி லும் யூரிபிடீஸ் அதிகமாகக் கலந்து கொண்டார். மீடியா நாடகத்தில் அமைந்துள்ள பல பத்திகள் இதை விளக்கிக் காட்டு கின்றன. கவிஞர்களும் இசை வல்லுநர்களும் விருந்தினர்களு டைய மகிழ்ச்சிக்கு ஆக்கம் தர இயல்வார்களேயல்லாமல் துயரைத் துடைக்கும் ஆற்றல் அவர்கள்பால் இல்லே என்று தாதிப்பெண் குறை கூறுகின்ருள். மக்கட்பேறு விரும்பத்தக்கதா இல்லேயா என் பதுபற்றி இசைக் குழுவினர் சர்ச்சை செய்கின்றனர். இவர்களு டைய மொழிகளேயெல்லாம் கேட்கும்பொது ஒரு கட்டுரையாள னின் விளக்கத்தைக் கேட்பதுபோலிருக்கின்றதே யொழிய ஒரு நாடகாசிரியனின் உரையாக அமையவில்லே. அன்றியும், மீடியா வின் சொற்பொழிவுகளில் சில, ஒரு வழக்கு மன்றத்தைப் புலப் படுத்துவதேயொழிய ஒரு நாடக மேடையைச் சுட்டுவதாக இல்லே. மேலும், யூரிபிடீஸ் பிற்காலத்தில் இயற்றிய நாடகங்கள் சமயத் தையும் ஒழுக்கத்தையும் சித்திரிக்கும் அவல நாடகங்கள் நீடித்து நிற்கா என்றறிய நமக்குத் துணேபுரிகின்றன. வாழ்க்கையின் நுண்ணிய சிக்கல்களேத் தீர்க்கமுனேயும் நோக்கம் அவைகட் கில்லே—இந்தப் பொறுப்பு தத்துவ வித்தகர்களுக்கு விடப்பட்டது போலும்!—இதற்கு மாருக, பொருளற்ற ஏதாவதொன்றைக் குறித்துக் கடுமையாக வீண்வாதம் புரிவதும் வெறும் ஊகங் களில் திளேப்பதுமான சொற்புரட்டுள்ள நாடகங்களே காட்சி யளிக்கலாயின. இப் பான்மைக்கேற்றவாறே நாட்டிய ஆசிரியர் களுடையவும் கவிஞர்களுடையவும் இலக்கியபாணி மாறுத லடைந்தது. இதன் விளேவாக, எஸ்கிலிஸ், ஸாஃபக்லீஸ் இவ்விரு புலவர்களில், ஓங்கி விளங்கிய கருத்துச் செறிவும் பொருட் செறிவும் மறைந்தே போயின. இவற்றிற்கு மாருக, இனிமை, தெளிவு, மென்மை ஆகிய பான்மைகளே இப்போது போற்றப்பட்டு வருகின்றன.

இவையெல்லாம், அரிஸ்டோபனீஸ் இயற்றிய மிகச் சிறந்த ஒன்ரும் ' தவளேகள் ' என்னும் நகைச்சுவை நாடகத்தை நம்முன்

நிறுத்துதற்குதவிய பண்புகளாகும். யூரிபிடீஸும் ஸாஃபக்லீஸும் இறந்த ஓராண்டிற்குப் பிறகு, அதாவது கி. மு. 405ஆம் ஆண்டில் இந் நாடகம் அரங்கேற்றப்பட்டது. அதில் அமைந்த நடிப்பே அதன் உட்பொருளை விளக்குவதாகும். பண்டைக் காலத்தில் நிலவிய சீரிய உணர்ச்சித் துடிப்பிற்கும் மனக் கற்பனையின் வேகத்திற்கும் அது எடுத்துக் காட்டாய்த் திகழ்கின்றது. அல்லாமலும் ஆழ்ந்த கருத்தோட்டம் ஊடுருவிச் செல்வதையும் பார்க்கின்றோம். பாங்கிழந்ததாக இப்பொழுது கருதப்படும் ஏதென்ஸ் நகரத்தின் பண்டைய மரபுகள் மீண்டும் தலையெடுக்காதா என இப்புலவர் ஏங்குவது இயல்பே. நகைச்சுவைக்குத் தெய்வங்களையும் இரையாக்குவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பாதாள உலகுக்கு இறங்கிச் செல்வது போன்ற பல அரிய வீரச் செயல்களைத் தன் வாழ்நாளில் ஆற்றியதாகப் புராணக் கதை கூறும் ‘ஹெர்குலீஸ்’ என்னும் மாபெரிய வீரன் ஒரு கண்ணியமற்ற பாத்திரமாக இந்த நாடகத்தில் காட்சியளிக்கின்றான்; எந்த ‘டையோனிஸஸ்’ தெய்வத்தை முன்னிட்டு இந்த நாடகத் திருவிழா நடைபெறுகின்றதோ அந்தத் தெய்வமே தன் புரோகிதனுடன் நாடக அரங்கின் கௌரவ ஆசனத்தில் அமர்ந்திருப்பது விந்தையிலும் விந்தை; நாடகத்தைப் பார்த்துச் சுவைக்கும் ஒரு வெறும் பதராக அவன் சித்திரிக்கப்படுகின்றான். இவ்வகையில் அந்தத் தெய்வத்தை இழிவு படுத்துவதில் யூரிபிடீஸுக்கு ஒரு தனி ஆர்வம். போலி நீதி மன்றத்தில் நடைபெறும் வழக்கு விசாரணை வாயிலாக இலக்கியத் திறன் ஆய்வும், இறுதியில் மனக்கோட்டமின்றிய தீர்ப்பும் மிளிர்கின்றன. அவல நாடகத்தைப் பற்றி நுண்ணிதின் ஆய்ந்து கண்டனம் செய்யும் இந்த நகைச்சுவை நாடகத்தை எண்ணிறந்த ஏதென்ஸ் மக்கள் கண்டு இன்புறுவதால், அறிவுடைய இவ்வகை அவையோர்கள் வாய்த்திருப்பது கவிஞர்களுக்கு மகிழ்ச்சி தருவதாகும்.

பிற்காலத்திய கிரேக்க நாடகங்களின் வரலாறு பற்றி எளிதில் கூறி முடிக்கலாம். கிரேக்க நகர் ஒவ்வொன்றிலும் ஒரு நாடக மன்றம் தோன்றலாயிற்று. அவல நாடகங்களைக் குறித்து ஆசிரியர் ‘அரிஸ்டோபனீஸ்’ உரைத்த கருத்து மெய்ப்பித்தது. அதாவது, அவற்றின் உயிர்த்துடிப்புத் தணிந்து கொண்டே வந்தது; இலக்கியச் சுவை செறிந்த படைப்புக்கள் மீண்டும் தலையெடுப்பதை நாடக அரங்குகள் மேன்மேலும் ஆர்வத்துடன் எதிர்நோக்கி நின்றன என்பதாம்; இந்தத் துறையில் அவற்றை மிகப் பெரிதும் கவர்ந்தவை, புலவர் யூரிபிடீஸ் இயற்றிய நாடகங்

களே. நகைச்சுவை நாடகத்தின் பழைய உருவம் மாறிவிட்ட தென்பது உண்மையே. எனினும் அது எப்போதும் போலவே விறு விறுப்புடன் இயங்கிவந்தது. அரசியல் வாசனை அதில் இப்போது காண்பதரிது, ஒருவகை மங்கல் ஏற்பட்டுவிட்டது; தனியார் வாழ்க்கையை நகைச்சுவையுடன் சித்திரிக்கும் வகையில் அது அமைந்துவிட்டது. புலவர் 'மெனுந்தர்' தோற்றுவித்த நாடகத்தை நகைச்சுவை நாடகம் என்று சொல்வது பெயரளவிலேதான்; அது ஓர் எழிலுடைய நாடகம் என்பதில் ஐயமில்லை; மனித குணத்தைச் சித்திரிப்பதில் ஒரு நுண்மையை அதில் காண்கின்றோம். அநாதைக் குழந்தைகள், காணமற் போன சிறுவர்கள், அழி செலவு செய்யும் இளைஞர்கள், ஆகிய இத்தகையோரை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது எனலாம். இத்தகைய நகைச்சுவை நாடக வகைகளையே ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு, ப்ளோத்யூஸ், தெரான்ஸ் எனும் சான்றோர்கள் ரோமாபுரி அரங்குகளில் இசைவுறப் பொருத்தினர். மாண்புடைய 'அலெக்ஸாண்டர்' மன்னன் இந்தியாவை நோக்கிப் படையெடுத்து வந்து கிரேக்க நாகரிகத்தை 'இந்தஸ்' நதிக்கரைப் பிரதேசம் வரையில் புகுத்திவந்தபோது நாடகக் கலை அதில் ஒரு முக்கிய பகுதியாக அமைந்திருந்தது. எத்தகைய நாடகங்கள் நடிக்கப் பெற்றன என்பது பற்றித் திண்ணமாய்ச் சொல்வதற்கில்லை; இலக்கியச் சுவை தோய்ந்த நாடகங்களாகத் தான் இருந்திருக்கும்; நகைச்சுவை நாடகங்களாக இருத்தல் கூடும்;—கேலிக் கூத்து செய்யும் சாமானியமான கதைக்களி நிகழ்ச்சிகளாயிருத்தல் கூடுமெனவும் ஊகிக்கலாம். கிரேக்க மரபு நம் நாட்டு மக்கள் மனத்தைக் கவர்ந்ததென்று சொல்வதற்கில்லை. எனினும் மாஸிடோனிய சாம்ராஜ்யத்தைச் சார்த்த 'ஸெலுக்கஸ்' வம்சத்தார் வடமேற்கு இந்தியப் பகுதியில் சிறிது காலம் ஆட்சி புரிந்தபோது சில கிரேக்க நாடக நிகழ்ச்சிகள் அங்கு நடைபெற்றிருத்தல் கூடும்.

# ஸாஃபக்லீஸ் (கி. மு. 496—406)

மிகச் சிறப்பு வாய்ந்த கிரேக்க நாடக உலகில் வானளாவி நிற்கும் மூன்று வரைச்சிகரங்களைக் காண்கின்றோம். எஸ்கிலஸ், ஸாஃபக்லீஸ், யுரிபிடீஸ்—இவர்கள் அத்துறையில் ஆற்றிய அரும்படைப்புக்கள் நம்மை மாபெரு வியப்பில் ஆழ்த்திவிடும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

நாடகப் போட்டியில் தம்முடைய வான்சிறப்பை நன்கு புலப்படுத்தி இடையறாது இருபது தரம் வாடா வெற்றிமாலை சூடிய பேறு ஸாஃபக்லீஸைச் சார்ந்ததாகும். மிகவும் முதிர்ச்சி பெற்ற நாடகக் கலைஞன் ; பழுத்த அனுபவம் பெற்றவர் ; ஆய்வுக் கலைபோற்றும் நாடகங்கள் ஸாஃபக்லீஸ் அமைத்த நாடகங்களே என்று அறிஞர் அரிஸ்டாடில் கூறி மற்றைய நாடகங்களுக்குக் கட்டளைக் கல்லாய் இவை சமையும் என்று இயம்பியுள்ளது இங்கு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. பாத்திரங்களின் தொகையை விரியச் செய்தார். தம் கற்பனைக்கேற்ப நாடக விதிமுறைகளைச் சற்றுத் தளர்த்தினார். எஸ்கிலஸ் உயர்ந்த பாத்திரங்களையே சித்திரித்தார். இவரோ சாதாரண ஆண் பெண்களுக்கும் தம் நாடகத்தில் இடந்தந்துள்ளார். எடிபஸ்தம் நாடக வரிசை முத்தொடர் கொண்டு திகழ்கின்றது.

இந்நாடகம் பண்டைய கதை மீது நிறுவப்பட்டது. மிகவும் துடுக்குள்ளவனும் அறிவொளி வாய்ந்தவனுமான ஒரு வேந்தன் நாவும் நவில நடுக்குறும் தீச்செயல்களைப் புரிந்து அவற்றின் கொடும் விளைவையும் நுகர்கின்றான். இவன் இப்படி நடந்து கொண்டது இவன் புரிந்த பிழையின் கோலமன்று. எல்லாம் தெய்வத்தின் செயலேயாகும். அகமம்னனைப்போலவே இந்த அவல நாடகத்தில் காட்சியளிக்கும் தலைவனும் பெருஞ்செருக்கால் தனக்கே அழிவைத் தேடிக்கொள்ளுகின்றான். ஓங்கி அடிக்கும் உணர்ச்சிப் புயலில் சிக்குறும் கிரேக்கர்கள் பணிவு, நிதானம்—இவற்றைப் பேண இயலுமோ ? இந்த அறங்கள் அவர்களிடத்தில் இலங்காத காரணத்தால் உள்நாட்டுக் கலகங்களில் ஆழ்ந்து மாய்ந்து போனார்கள். அவருடைய நாகரிகமும் மடிந்தது.

அக்காரணம் பற்றியே கிரேக்க நாட்டு அவல நாடகக் கலைஞர்கள் செருக்கின் தீயவிளைவினைத் தம் நாடகங்களில் சித்திரித்துள்ளார்கள். ஒழுக்க இயல் வல்லுநர் மிதத்தையும் வற்புறுத்தினர். 'அமைதியுற வாழ்வு முழுதையும் நோக்கும் திறன்வாய்ந்த சான்றோன் ஸாஃபக்லீஸ்' என்று ஓர் ஆங்கில ஆய்வுப் புலவர் கூறியுள்ளார். இவர் நடுவு நிலையில் நின்று எதையும் ஆய்கின்றார். மனிதனுடைய தனிப்பட்ட இயல்பைக் காட்டுகின்றார். ஆனால் ஒலிம்பஸ் குன்றுகள் மீது உறையும் தெய்வங்களின் சங்கற்பத்தை மனிதன் மறக்கவில்லையென்றும் சுட்டுகின்றார்.

எடிபஸ் படும் எல்லையற்ற துன்பம் அவன் தானறியாமல் தந்தையைக் கொல்லுதல்—தாயென்று தெரியாமலேயே தன் தாயை மணத்தல், தான் நல்ல நெறியில் நிற்கின்றோம் என்னும் செருக்குத் தூண்ட உண்மையை நாடுதல்—இவற்றால் எழுந்த கடுஞ்சாபம் இவையனைத்தையும் உன்னுங்கால் கணக்கிலா இன்னல்கள் நிகழ ஒரு நியாயம் உண்டா என்னும் ஐயம் நம் மனத்தகத்தே எழாமற் போகுமோ? அயிர்க்கும் சிந்தையோடு தான் ஸாஃபக்லீஸ் இந்த நாடகத்தை அமைத்தார் போலும்!

# நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| எடிபஸ் | — | தீபன் நாட்டு வேந்தன். |
| மதகுரு | — | |
| க்ரியான் | — | ஜொகாஸ்டாவின் உடன்பிறந்தான். |
| டைரீஸியஸ் | — | கண்ணிழந்த நிமித்தகன் |
| ஜொகாஸ்டா | — | எடிபஸின் தாயும், மனைவியுமானவள். |
| முதல் தூதுவன் | — | காரிந்த் நாட்டிலிருந்து வந்த இடையன். |
| ஓர் இடையன் | — | முன்பு லேயிஸ் அரண்மனையில் பணியாற்றியவன். |
| இரண்டாவது தூதுவன் | — | அரண்மனைக்குள்ளிருந்து வந்தவன். |
| பாணர்கள் | — | சான்றோர்கள். |
| | — | கணக்கற்ற முதியோர்கள், இளைஞர்கள், குழவிகள். |
| ஆன்டிகனி, இஸ்மினி | — | எடிபஸுக்கும் ஜொகாஸ்டாவுக்கும் பிறந்தவர்கள். |

# எடிபஸ் வேந்தன்

*அரண்மனை நுழைவாயில் கதவுகளுக்கருகே அமைந்திருந்த மேடையைச் சுற்றிலும் இளைஞர்கள், முதியோர்கள் யாவருமே கெஞ்சி இறைஞ்சும் தோற்றத்துடன் அமர்ந்திருப்பதைக் காண்கிறோம். அவர்கள் முன் 'எடிபஸ்' காட்சியளிக்கின்றார்.*

**எடிபஸ்**

*(அவர்களை நோக்கி)*

வான்புகழ் எய்திய 'காட்மஸ்' புரவலன் தொல்காலத்தில் தோற்றுவித்த 'தீப்ஸ்' மாநகரில் உயிர்வாழும் என் அருமை மக்களே, குழல் கயிற்றினால் பிணைக்கப்பட்ட ஆலிவ் மரக் கொப்புக்கள் தாங்கி மன்றாட்டு விண்ணப்பம் புரியும் நோக்குடன் இங்கு அமர்ந்திருப்பது ஏனோ? நாற்புறமும் வீசும் இந்த நறும் புகையின் கருத்து என்னே? எங்கும் புலம்பல்கள், தெய்வப் பிரார்த்தனைகள்! இவை பற்றி யெல்லாம் பிறர்பால் அறியப் புகுவதைக் காட்டிலும் நேருக்கு நேராக உணரக் கருதி, நானே, மாநிலம் போற்றும் மன்னன், எடிபஸாம் நானே ஈண்டு அணுகியுள்ளேன்.

(அங்குக் காட்சியளித்த மதகுருவை நோக்கி) ஓகோ! முதுமை மலிந்த சான்றோரே, தமது தூய்மையான முடிமயிரை நோக்குங்கால் இப்பெருங் குழுவினர் சார்பில் உரையாட வந்துள்ளீர் என ஊகிக்கின்றேன். தங்கள் மனக்கோளையும் உட்கருத்தையும் எடுத்துரைப்பீராக. அச்சுறுத்தும் தீங்கொன்றை எதிர்நோக்கி எந்தன் ஆதரவை நாடி ஏகியுள்ளீர்களா, அன்றி என்பால் ஏதாவது நன்கொடை விழைந்து ஏங்குகின்றீர்களா? உங்கள் அனைவருடைய நலனைப் பேணும் பொறுப்பில் என்னுடைய பேரார்வத்தை இம்மியும் ஐயுறமாட்டீர்களன்றோ? உங்கள் போன்றவர்களை அசட்டை செய்வேனாயின் நானொரு பசையற்ற கொடியோனேயாவன்.

மதகுரு

மாண்பு செறிந்த மன்னனே, எடிபஸ் ஏந்தலே, மீச்சிறு மகவுகளும், மூப்பு முதிர்ந்த கிழவர்களும் தங்கள் மாளிகை மேடைகளை வட்டமிட்டிருப்பதைக் காண்கின்றீர். அறிவோ அனுபவமோ சிறிதுமற்ற சிறுர்கள், நரைமயிர் முதியோர்கள், ஜுஹூஸ் தேவனின், என்போன்ற அடியார்கள் இதோ! நுண்ணறிவுவாய்ந்த வாலிபர்கள் இங்குக் குவிந்துள்ளனர். இஃதொரு பால்; மற்றுமோ, தோரணம் முடைந்த கழிகள் கையிலேந்திய பாமரமக்கள் கடைவீதிகளிலும், 'பல்லாஸ்' தேவனின் இரு ஆலயங்கள் முன்னிலையிலும் தீமூட்டி வருவது உரைக்கும் இஸ்மெனிஸ் நிமித்திகன் எதிரிலும் குழுமியுள்ளனர்; புண்பட்டு நொந்திருக்கும் இராச்சியம் தலைதூக்கி நிற்கும் வகையறியாது தவிப்பதைத் தாமே உணர்வீர்! குருதிப் பெருக்கில் சிக்கித் திணர்வது கண்கூடு, தானியக் கதிர்கள் தேமல் படிந்து சடைவுற்று வதங்குகின்றன. புள்ளினங்கள் நோயால் பீடித்துத் துன்புறுகின்றன. சூல்கொண்ட பெண்ணினத்தின் கடுவேதனை சொல்லுக்கடங்காது. இத்தகைய வெந்துயர் ஒருபுறம் நிற்க, தொத்துப்பிணி தேவதையோ, சுடர்விட்டெரியும் தீப்பந்தம் கரத்தில் ஏந்தியவளாய் மாமன்னன் 'காட்மஸ்' இல்லத்தை வெற்றுக்கி நம் நகர்மீது கவ்விப்பாய்ந்துள்ளாள். இருள் மண்டிய அருஞ் சிறைத் தலைவன் ப்ளுட்டோவின் பிரதேசத்தில் காணும் கண்ணீரும் கம்பலையும் அருவி பாய்கின்றன.

வேந்தனே, இத்தகைய இடும்பைகளுக்கிடையே அல்லலுறும் நிலைமையில் தங்கள் மாளிகைமுன் குழுமிக் குந்தியுள்ளோம். தாம் ஒரு நூதனதெய்வம் என்ற கருத்திலன்று, மாந்தரில் ஒரு தனிமுதல்வன் நீவிர், என்ற எண்ணம் கொண்டே, பிறிதில்லை. வாழ்க்கை வெள்ளத்தில் எள்ளளவும் எதிர்பாராது தோன்றும் நிகழ்ச்சிகளுள் முதலிடம் வாய்க்கப்பெற்றது தங்கள் வாழ்க்கை. ஆண்டவனருள் பெற்றவர்களுள் முதலிடம் தமதே. மாவீரன் 'காட்மஸ்' தோற்றுவித்த இந்நகரில் தாங்கள் அடிபெயர்த்ததுமே அந்தக் கொடிய இசை அரக்கிக்கு நாங்கள் செலுத்திவந்த வரிவிதிப்பிலிருந்து எங்களை மீட்டுவித்த பெருமை தங்களையே சாருமன்றோ! எங்களுடைய முறையீட்டுக்கோ பிறர் அளித்த அறிவுரைக்கோ இணங்கித் தாங்கள் இத்தகைய அருஞ்செயலை ஆற்றவில்லை என்பதை நன்கறிவோம்; மற்றுமோ ஆண்டவன் ஆணையைத் தலைமேற்கொண்டு இப் புனிதப்பணியை நிறைவேற்றியுள்ளீர். எங்கள்

வாழ்க்கைக்குப் புத்துயிர் ஊட்டலாயினீர். இப்படி நான் கூறுவது எங்கள் அனைவருடைய ஒருமித்த முடிவு. எடிபஸ் இறைவனே, ஒப்புயர்வற்ற எங்கள் காவலனே, ஆண்டவன் அருளிய நுண்ணொலிக்குச் செவிசாய்ப்பதின் பயனாகவோ, அன்றி, இயல்பாய் மாந்தன்பால் மன்னிமிளிரும் மதித்திறன் கொண்டோ ஒரளவு ஆதரவு எங்கட்கு நல்குமாறு நயந்து இறைஞ்சுகின்றோம். இது விஷயத்தில் நுண்ணறிவு படைத்த உசாத் துணைவர்களின் புத்திமதியும் தங்களுக்கு வாய்ப்பது திண்ணம். ஓங்கி விளங்கும் தங்களுடைய கீர்த்தி நலிவுறாது நிலைத்துநிற்கும் வகையைக் கையாள்வீராக. முன்பு எங்கள் பால் காட்டிய உற்சாகத்தை உள்ளத்தில் ஊன்றியவராய் எங்கள் நாட்டுக்கு இரட்சகனாய்த் திகழும் தலைவரேயெனத் தம்மை நாங்கள் போற்றுவதில் வியப்பில்லை. 'உவப் புறக்கைகொடுத் தான்; ஆயின், அந்தோ? இழிநிலைக்கு ஈர்க்கும் பொருட் டேவா?' என்றெல்லாம் மக்கள் பழிக்கா வண்ணம் தங்கள் கோனாட்சி என்ஞான்றும் ஏற்றத்துடன் இலங்குவதாக! எங்களை உயர்நிலைக்கு உந்துங்கள். சிறிதும் நெகிழ்வுறாப் பாறைகொண்டு நம்நகரை நிறுவுவீராக. விண்ணுலகில் ஓங்கி இயங்கும் தமது திருத்தாரையின் விளைவே ஈண்டு நாங்கள் துய்க்கும் நற்பேறாகும். அஃது இம்மியும் இழிவின்றி நிலைநிற்பதாக. தற்போது திகழ்வதே போல் தங்கள் தூய ஆட்சி இடையறாது ஓச்சப் பெறுமாயின் மக்கள் மண்டிய மாநிலமே அதற்கு ஏற்பாகும்; வறண்ட பாலையில் செங்கோல் செலுத்திப் பயனேது? மாந்தர்க்கு மாந்தர் துணைநின்று காக்கும் வலிமையிலாதாயின் கோட்டைக் கொத்தளங்களோ, கழிபெருங் கப்பல்களோ வெறும் விழலேயாம்.

எடிபஸ்

என் அன்புக் குழந்தைகளே, உங்கள் தேவையையும் நாட்டத்தையும் நன்குணர்வேன். உங்கள் முறையீடுகள் எல்லோர் உள்ளத்தையும் புண்படுத்தும், ஐயமில்லை. ஆயின், நான்படும் அல்லல்களுக்கு உங்களுடைய ஊறுகள் ஈடுஇணையாகா. நீங்கள் துய்க்கும் இன்னல்கள் தனி ஒவ்வொருவனையே சாரும்; பிற ஒருத்தனைத் தீண்டாவாம். நான் படும் பருவரலோ என்னையும் தனி ஒவ்வொருவனையும் பல்லோரையும் ஒருங்கே கவ்வி நிற்கிறது. எனவே, பகற்கனவு காணும் சோம்பன் ஒருவனை விழிப்புறச் செய்ததாக நீங்கள் நினைக்கலாகாது. என் பரிவுக் குகந்த குழந்தைகளே, நான் சொறிந்த கண்ணீருக்கு எல்லையில்லை.

தொய்யல்தரும் திகைப்புக்கள் பலவற்றைக் கடந்துள்ளேன். திணறித்தவித்த அந்நிலையில் உறுதிதரும் நல்லெண்ணம் ஒன்று உதித்தது; அதன் சுவட்டைப் பின்பற்ற முனைந்தேன். மினியோகஸின் திருமகனும் எனது மைத்துனன் க்ரியானுக்கு அழைப்பிட்டுச் செஞ்சுடர் தேவன் கோவில்கொண்ட டெல்ஃபி ஆலயத்தை அணுகி நம் நாட்டில் நிலவும் துயரைத் துடைக்கும் வழி என்னவென்று அறிந்துவருமாறு ஆணையிட்டுள்ளேன். அக்கணம் தொடங்கி நாட்களைக் கணக்கிட்டபடியே ஏங்கி நிற்கின்றேன். எந்த அளவு வெற்றி வாய்ந்தாரோ அறிகிலேன், கவலை கொண்டுள்ளேன். இத்துணைக் காலத் தாழ்வு ஏனோ, விந்தையே! அன்னான் மீண்டதுமே ஆண்டவன் இட்ட ஆணையைக் கடைப்பிடிக்காமலிருப்பேனாயின் நான் ஓர் ஈனனே யாவன்.

மதகுரு

தங்கள் செம்மொழிகள் தக்க தருணத்தில் வெளிவந்தன. க்ரியான் அண்மையில் காட்சியளிக்கின்றார் என்பதற்கு அப் பெருங் கூச்சல் சான்றாகுமே!

எடிபஸ்

அப்போலோ இறைவனே! அதோ, அவர்தம் அகமலர்ச்சி அவர் தாங்கிவரும் இனிய செய்திகளுக்கு முற்குறியாகத் திகழ்வதாக!

மதகுரு

ஆம், என்னுடைய ஊகமும் அதுவே; சிரத்தில் அவர் சூட்டி வரும் பெர்ரிபழ வாகை மாலையே அதற்கு அத்தாட்சியாகுமே; என்றுமே அவர் அவ்வாறு அணிந்ததில்லையே!

எடிபஸ்

யாவும் விரைவில் அறியலாவோம்; செவிக்கெட்டிய அண்மையிலேயே அவர் நெருங்கி விட்டார்.

(க்ரியான் நுழைகின்றார்.
அவரை நோக்கி.)

மன்னர்குல மைத்துனனே, புகழ் ஓங்கிய மெனேகியஸ் மைந்தனே, ஆண்டவன் அளித்த அருள் வாக்கு யாதோ?

க்ரியான்

நற்செய்தியே, படமுடியாப் படுந்துயர்களுக்கும் தக்க ஒரு தடுப்புக் காண்போமாயின் யாவும் செவ்விதின் முடிவுபெறும் என்பதே.

எடிபஸ்

அத் தெய்வத்தின்பால் வெளிவந்த செம்மொழிகள் யாவோ? இப்போது நீ உரைத்ததைக் கொண்டு அச்சுறுவதற்கோ உறுதிப் பாட்டிற்கோ இடமிலதே.

க்ரியான்

நான் தாங்கி வந்த செய்தியைப் பட்டவர்த்தனமாகப் பறை யென்று ஆணையிடுவீராயின் தடையின்றி அவ்வாறே அறை வேன். ஆயின் நாமிருவரும் மாளிகைக்குட் புகுந்து உரையாடு வதே உகந்ததாகும்.

எடிபஸ்

அனைவர் முன்னிலும் நவில்வதே நலம். நான் ஏந்தியுள்ள பொறுப்பு, இதோ இந்தக் குடிமக்கள் சார்பிலேயேயன்றி என் பொருட்டு மிகச் சிறு அளவே.

க்ரியான்

அவ்வாறே கருதுவீராயின் கடவுள் தெரிவித்ததை முற்றிலும் மொழிந்திடுவேன். செங்கதிர் தெய்வம் ஃபீபஸ் இட்ட ஆணை இஃதாம்; இந்நாட்டைப் பீடித்திருக்கும் தீயகறையை நெறி முறைக்கேற்ப அறவே களைந்தெறிதல் நலந்தரும் என்பதே.

எடிபஸ்

அத்தகைய கறைதான் என்னே? அதற்குற்ற பரிகாரம் யாதோ?

க்ரியான்

நாடு கடத்தல், அன்றிக் கொலைக்குக் கொலை பழிவாங்குதல். முன்பு பெருகிய குருதிவெள்ளம் ஆட்சிக்கலத்தை அறவே நசித்ததாம்.

எடிபஸ்

அத்தகைய பழிப்புக்கு உள்ளான பாதகன் யாராயிருத்தல் கூடும்?

க்ரியான்

இவ்விராச்சியத்திற்குத் தாங்கள் தலைமைப்பதவி வாய்க்கப் பெருவதற்கு முன் மன்னராய்த் திகழ்ந்தவர் 'வேய்யஸ்' ஆவர்.

எடிபஸ்

என் செவியில் அது வீழ்ந்திருக்கிறது; அதுவே தவிர நேரில் நான் அவரைப் பார்த்ததில்லை.

க்ரியான்

படுகொலைக்கு அவர் உள்ளானுர்; அது குறித்துக் கடவுள் ஆணை வெள்ளிடை. அஃதாவது, அவர்தம் உயிரைக் குடித்தவர்கள் எத்தகையோராயினும் சரி, அக் கொடுஞ்செயலுக்குற்ற தண்டனைக்கு உரித்தானவர் என்பதே.

எடிபஸ்

அவர்கள் யாராயிருத்தல் கூடும்? மிக நீண்ட காலத்திற்கு முன் நிகழ்ந்த தீச்செயலின் அடிச்சுவட்டை மோப்பம் பிடித்தல் எவ்வாறு இயலும்?

க்ரியான்

அந்தக் கோரமான காரியம் இதே நாட்டில் நிகழ்ந்ததெனத் தெய்வவாக்கு ஒலித்தது; 'அறிய முனைவோர் அறிந்தே தீருவர்; கைகட்டி வாளாயிருப்போர் அந்தகர்க்கு ஒப்பாவர், உறக்கத்தில் ஊன்றியவர்களே.'

எடிபஸ்

லேயிஸ்ஸுக்கு இத்துர்க்கதி நேர்ந்தது, அரண்மனைக் குள்ளேயா, வெளியிலா? அன்றி அவர் வெளி சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும் தறுவாயிலா?

க்ரியான்

நகர் நீங்கி சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும்போது தான்; டெல்ஃபி நகரை நோக்கிப் புறப்பட்டார்; ஆயின் இல்லம் மீண்டாரில்லை; தெய்வவாக்கு ஒலித்தது இம்மட்டே.

எடிபஸ்

அதுபற்றிய செய்தி வேறென்றுமே கிடையாதோ? அதைக் கண்டுபிடிக்க உதவக்கூடிய வகையில் அவருடன் சென்றுர் யாருமிலரோ?

க்ரியான்

அவருடன் சென்றவர்களில் உயிருக்கஞ்சித் தப்பியோடிய வன் ஒருவனே. நிகழ்ந்தது குறித்து எல்லா விவரங்களேயும் அவன் அறியானெனினும் ஒன்றுமட்டில் சுட்டாகக் கூற இயல்வான்.

எடிபஸ்

அவ்வொன்று யாதோ? அதைத் தொடர்ந்து பின்பற்றி ஆய்வோமாயின், உண்மையின் அண்மைக்கு இட்டுச் செல்லக் கூடிய ஓர் ஒளிச் சுடராய் அது உதவுமன்றோ?

க்ரியான்

கொலே புரிந்தவன் ஒரேவொரு வழிப்பறியல்லன். பல வஞ்சகர்கள் ஒருங்குகூடி அவரைத் தாக்கி மாய்த்தார்களாம். இதுவும் அந்தத் தெய்வம் வெளியிட்ட கூற்றே.

எடிபஸ்

அத்தகைய வெஞ்செயலில் ஈடுபட எந்த ஒரு கயவன் துணிய இயல்வான்? தீல்ஸ் இராச்சிய வஞ்சகன் எவனுவது லஞ்சம் கொடுத்து ஏவிய ஒருவனுப் ஆற்றப்பட்ட செயல் இது வென்றே திண்ணமாய்க் கருதலாமன்றோ?

க்ரியான்

அந்த ஐயமும் எழாமலில்லே. ஆயின் அந்தக் கொலேக்குப் பிறகு நாட்டில் நிலவிய தத்தளிப்புக்கிடையே குற்றவாளியைக் கண்டுபிடித்துப் பழிவாங்கும் முயற்சி மேற்கொள்ளப்படவில்லே.

எடிபஸ்

அரசவம்சமே படுநாசத்துக்கு உந்தப்பட்டிருந்த அந்த ஏல்வையில் இதுபற்றித் தீவிரநாட்டம் கொள்வதைத் தடுக்கும் அளவுக்கு என்ன இடுக்கண் நாட்டில் நேர்ந்து விட்டது?

க்ரியான்

மறைபொருளாய் மொழிவதில் வல்லமை வாய்ந்த அந்தத் தேவதை, மங்கி மறைந்து போன இவ்விஷயம் குறித்து வீணே கருத்தைச் செலுத்துவதைத் தவிர்த்து ஈண்டு இன்றியமையாத தேவைகள்பால் கவனம் செலுத்துமாறு வற்புறுத்தியது.

எடிபஸ்

அது நிற்க, என் முயற்சியைப் புதுமுறையில் மேற் கொள்வேன்; இருளையகற்றி ஒளியை மேற்கொள்வேன். அது பீப்ஸ் தெய்வத்தை மேன்மைப்படுத்தியவாறும் அமையும். உயிர்நீத்த உத்தமனைக் கருதி நீயும் இம் முனைவில் ஈடுபடுதல் சால்பாகும். தீப்ஸ் நகருக்கும் தெய்வத்துக்கும் இழைத்த இந்த பெருங் குற்றத்துக்குப் பரிகாரம் காண்பதில் என்னாலியன்றளவு பங்கு கொள்வேன். சேய்மை உறவினனுக்கு நேர்ந்ததைக் கருதியன்று, என்பொருட்டே எனலாம். அம்மாமன்னன் குருதியைக் குடித்த நஞ்சனைய வஞ்சகன் என்னுயிரை மாய்க்கவும் முற்படலாமன்றோ? பழங்குற்றத்தைச் சீர்செய்யப் புகுவதில் என்னையே நான் காப்பாற்றிக் கொள்வதாகுமே! என் சேய்களே, விரைவு படுங்கள்; இம் மேடையை விட்டு அகல்வீராக. உங்கள் விண்ணப்பச் சின்னங்களைக் களைந்தெறியுங்கள்; இந்நகர்ப் பொதுமக்கள் அனைவரையும் இங்கு ஏகுமாறு பணியுங்கள். கடவுள் துணையால் வெற்றி நமதே, திண்ணமது; வீழ்ச்சி படுகுழியில் தள்ளிவிடும்.

(எடிபஸும் க்ரியானும் மறைகின்றனர்.)

பாணர்

இறைவன் ஜூஸ் இன்னிசைச் செல்வியே!
புகழ்மணம் பொழியும் புனிதத்தீபன்
நகரை நண்ணிய தெய்வ நங்காய்!
யாதோ கொணர்ந்தனை யாதோ கொணர்ந்தனை
ஆடகப் பித்தியன் கோயிலில் அமர்ந்தோய்!
அச்சம் புகுந்தே அகத்தை வாட்டவே
அறவே அஞ்சி நடுங்குவன் அந்தோ!
தீலியன் நோய்தனைத் தீர்க்கும் மருந்தே!
தெய்வச் செவிதனை என்பால் திருப்புவீர்.
முன்பின் காணு முழுதுயர் உளதோ?
பேரவாப் பொற்பூ பெற்ற ஆர்வமே!
அமர உலகின் அழியாக் குரலே!
காலச் சுழல் கொணர் பண்டைக் குழுவாய்
உண்டு கொல் உரைப்பீர் பணிவன் யானே
தெய்வநாதன் திருமகள் அத்தினு!
மக்கள் கூடும் மாபெரும் அகொரா
நாப்பண் அப்பால் நயம்பட விளங்கும்

ஆர்டிமஸ் நங்காய் ! அயில் திகழ் அப்பலோ
மூன்ருள் மூரி நிமிர்ந்த நோய்களை
நாட்டை நலியா வண்ணம் சாடிய
உங்கள் அருள்தனை உவந்தே அளிப்பீர்
இடுக்கண் களைய இறைஞ்சுவன் யானே.
அளத்தற் பாலதோ யான்படும் அல்லல் ;
தொத்துநோய் எங்கும் தொடரப் பார்ப்பீர்
அதனை அகற்ற உபாயம் உளதோ ?
மாநிலச் செல்வம் மடிய ஆற்றேன்
அவைக்கண் அடைந்தேே் ஆற்ரு அலரும்
சூல்கொள் பெண்டிர் சுருண்டே மாய்வர்
காட்டுறை புள்ளினும் கடப்பருந் தீயினும் கடிதே,
மீளா மேற்றிசைத் தேவை மேவும்
கணக்கில் உயர்தனை காண்பீர் நீரே.
எண்ணரும் சுறவுகள் எழுந்த நாட்டில்
இரங்குவார் அற்றே எங்கும் சேய்கள்
புழுதியில் புழுகிக் கிடந்தது பொருந்துமோ
மக்கள் மடியிலே பரவும் இந்நோய்
எங்கணும், இளமை காட்டும் மனைவியர்
நரைதலை அன்னைகள் நாடியே அத்திரு !
பெரும்பலிபீடப்படியினில் வீழ்ந்தே
எழுப்பும் இன்னற்குரல் ஓர்ந்திலை
பெம்மான் பெற்ற அரும் பொற்பாவையே
அருளொளி காட்டி அகற்றுவாய் நீயே.
பித்தளைக் கேடயம் பிறங்கல் இன்றியே
பேரொலி புரியும் மரணத் தேவனை
அனல்தனை அள்ளி வீசியே சுடுவன்
புயல்தரு விரைவினைப் பொருக்கெனக் கிளப்பியே
அவன்தனை அளப்பரும் ஆர்கலி ஆழ்த்துவீர்
அவனை மாய்ப்பதே உன்தன் அறங்காண்
அண்ணலே ! அசனிகைதனில் தாங்கியே
பொற்கசை பொழிவீர் அப்பலோ ! அவன் மிசை
ஆர்டிமஸ் நங்கையே ! அனல்தனைக் கொட்டுவீர்
நறவுத்தேவனே ! தெய்வம் நாணுறும்
அந்தக்கயவனை அழிப்பீர் அழிப்பீர்
கொழுந்தீப்பந்தம் விரைவில் கொளுத்தியே.

எடிபஸ்

ஆண்டவனை நோக்கி நீங்கள் செய்த பிரார்த்தனை வீண் போகாது, திண்ணமே; எனினும் என்சிறு சொற்களுக்குச் செவ் வனே செவிசாய்த்து அவைசுட்டும் பரிகாரத்தைக் கையாள்வீரா யின் அமைதியும் ஆறுதலும் காண்பதற்கு இடமுண்டு எனக் கருதுகின்றேன். கொலை நிகழ்ச்சி குறித்தும் மற்றும் நம் காதில் விழுந்த வதந்திகள் பற்றியும் இதற்குமுன் நான் ஒன்றுமே அறியேன். அறிகுறி முகாந்திரம் ஏதுமின்றி 'அவற்றைச் சார்ந்த விவரங்களைத் தெரிந்து கொள்வது பிறருடைய துணை பலமின்றி என்பால் இயலாதன்றோ? அந்நிகழ்ச்சிக்கு வெகு காலம் கடந்தே இந்நாட்டுக் குடிமகனுனேன். எனவே, குடி மக்கள் யாவர்க்கும் பொருந்துமாறு பறையறை சாற்றத் துணிந் துள்ளேன். தீபன் நாட்டு மக்களே, 'லாட்டாகஸ்' வேந்தனின் திருமகன் 'லேயிஸ்' எவனுடைய கரங்கொண்டு பலியுண்டான் என்பது பற்றி அறிந்தவன் எவனுவது இருப்பின் இம்மியும் ஒளி மறைவின்றி வெளியிடுமாறு அவனுக்குக் கட்டளை எழுப்புகின் றேன். அறிந்தும் அதை வெளியிடுவதற்குக் கூச்சப்படுவதாக ஒப் புக் கொண்டாலுமே மரணதண்டனைக்கு ஆளாகமாட்டான் என் பதை அவன் உணர்வானுக; ஆயின் அவன் அயல்நாடு கடத்தப் படுவது தவருது; பிறிதொரு தீங்குக்கும் உட்படாமல் அவன் வெளியேறலாகும். கொலை புரிந்தவன் பிறநாட்டடைச் சார்ந்த வன் என்றறிந்தவன் எவனுவதிருப்பின் எனது நன்கொடைக்கு அவன் உரியவன் என்பதோடன்றியும் என் உள்ளார்ந்த நன்றிக்கும் பாத்திரமாவான். அச்சத்தினுலோ, சுயநலங் கருதியோ, அன்றி நண்பர்கள் நலத்தைப் பேணும் பொருட்டோ இவ்விஷயத்தைப் பற்றித் தெரிந்து எவனொருவன் எனது ஆணை யைப் புறக்கணித்து வாய்மூடி வாளா இருப்பானே அத்தகை யோனைக் குறித்து எனது தீர்மானத்தை அறிவீர்களாக: கொலையாளி யாராகினும் சரி, அவனைச் சார்ந்த விதிவிலக்கு என்னெனின், நான் செங்கோல் செலுத்தும் இந்நாட்டில் எவனொருவனுமே அவனுக்குப் புகலிடம் தரலாகாது; அவனோடு உரையாடுவதே ஊனச்செயலாகும். தொழுகைக் குழுவிலோ, வேள்வி வகைகளிலோ, கழிவிரக்கச் சடங்குகளிலோ அவன் இடம்பெறல் இழிவாகும்; உங்கள் இல்லங்களில் அவன் கால் வைக்கவொட்டாமல் துரத்தப்படவேண்டும். தெய்வவாக்கு எனக்கு அண்மையில் அறிவுறுத்திய குறிப்புப்படி ஈண்டு நாம் கழிக்கும் நாட்கள் கறை தோய்ந்தவை என்பதாகும். ஆகையின்

மடிந்த மன்னன் சார்பிலும் தெய்வத்தின் சார்பிலும் நான் பரிந்து போராடத் துணிந்துள்ளேன். கொலைபாதகன் மீதும் அவனுக்குத் துணைவலியாய் உதவியவர்கள் மீதும் நான் இடும் சாபம் இஃதாம்: கடைகெட்ட அந்தக் கயவன் அலைக்கழிவில் சோர்வுறுவனாக; பிறரறியாமல் என் இல்லத்தில் அவன் இடம்பெற உதவுவேனாயின் பிறர்பால் நானிட்ட சாபத்திற்கு நானுமே உள்ளாகுக! குடிமக்களே, என்பொருட்டும் இறைவன் சார்பிலும் தெய்வச் சீற்றத்தால் பாலைவனமேபோல் தீய்ந்து காட்சியளிக்கும் நம் நாட்டின் நலனைக் கருதியும் நான் பறையறைந்த இம்மொழிகள் செவ்வனே நிறைவேற்றப் பெறுவதற்கு ஆக்கமளிப்பீராக. ஐயமறக் கடவுட் சாற்றிய கட்டளை ஒருபால் நிற்க, உங்களுக்குப் புகழ்மலிந்த வேந்தனாய்த் திகழ்ந்த அந்தச் சான்றோனை மாய்க்கத் துணிந்த அந்தப் பாதகனைப் பழிவாங்காதிருப்பீராயின் உலகத் தூற்றுரைக்கு இரையாவீர். தீங்கின் சுவட்டைத் தேர்ந்தறிதல் உங்கள் கடமையாகும். தாம் பெற்றெடுத்த மகவைச் சார்ந்து அவருக்கேற்பட்ட ஆசாபங்கத்தை அறிவோம். எனினும் அவர் துய்த்த அதே கருவில் என்பால் ஈனப்பெற்ற சேய்களின் வாயிலாய் அக்குறைபாடுநீங்கி எங்களிருவர்க்கிடையே அணுக்க உறவு உருவாகியுள்ளதன்றோ? விதி அவரை மரணவாயில் ஈர்த்தது. அவரை மாய்த்த காதகனைப் பழிவாங்குதல் என்னுடைய தீராப் பொறுப்பாகும். வான்புகழ் மாவேந்தர்கள், மூத்தவர் காட்மஸ், பாலிடோர், லப்டாகஸ் பரம்பரையில் தோன்றிய அம்மன்னனை எனது நேர் முன்னோன் என்றே பாராட்டுகின்றேன். அவர்தம் உயிர் குடித்தக் கொடியோனைக் கண்டறிந்து கொலைக்குக் கொலைவாங்குதல் எனது முழுமுற்றான கடமையாகும். இந்த என் உறுதிப்பாட்டுக்குப் பிணக்காய் இயங்குபவர்களைக் குறித்து நான் இறைவனை இறைஞ்சுவது அவ்வக் காலங்களில் இம் மாநிலம் மயக்கும் களிவகைகள் அவர்களுக்குக் கிட்டாமலிருப்பதாக; அவர்கள் குடும்பத்தில் சூல் கொள்ளுதல் அரிதாகுக. தற்போதைக் காட்டிலும் மிகையாகச் சோர்வுற்று வாடுதல் அவர்கள் வாழ்வாகும். ஆனாலோ, என்னுடைய நடைமுறைகளுக்கு ஊக்கமளித்து, என்பால் உண்மையுணர்ச்சியுடன் பரிவுகாட்டும் குடிமக்களே, தர்மதேவதையே நமக்கு அருந்துணையாய் உதவிபுரிந்து, எல்லாக் கடவுளர்களுமே கருணை சொரிந்து உங்கள் நல்வாழ்க்கைக்கு மேன்மேலும் ஆக்கம் அளிப்பார்களாக.

பாணர் தலைவன்

மாண்பார்மன்ன, வலியுறவறைந்த உமது மாசபதந்
தனைத் தாழ்ந்தேற்கின்றேன்
எனினும்,
அக்கொலைக்கும் எனக்கும் பிணைப்பிலையறவே; ஆணை
யிட்டறைவேன்
அதனைப்புரிந்த அரக்கன்யாரோ, அதனையுமிம்மியும்
அறியாதவன்யான்
இப்பொருளுண்மையை ஐயந்திரிபுற உணருங்குறிப்
பொன்றருளிய
தெய்வமாம் ஃபீபஸ் தன்னையடுத்து, உசாவுதலொன்றே
தெருள்பெறும் வாய்ப்பாம்.

எடிபஸ்

தக்கதே உரைத்தீர்; கடவுளர்களை அவர்தம் கருத்துக்கு மாருக மொழிய வற்புறுத்தல் எவனொருவனாலும் இயலாதன்றோ?

பாணர்

உண்மை. எனவே, தங்கள் விருப்பம் கைகூடுதற் குற்ற முறையொன்றைக் கையாளலாமே.

எடிபஸ்

அம்முறையாதோ அறிவிப்பீர்.

பாணர்

என்னுயகனே, இறைவன் ஃபீபஸ்
கருத்தோடொன்றிய கலைஞன் ஒருவன்
இப்புவிதன்னில் இருக்கின்றானெனில்
உலகம்போற்றும் அத்தனி உத்தமன்
நுண்ணறி நிமித்தகன் டைரீஸியஸே
நம்முளமீண்டு நாடும் பொருளைத்
தெள்ளிதினுரைக்கும் தேற்றன் அவனே.

எடிபஸ்

இந்தத் திட்டத்திலும் நான் அசிரத்தையாயிருக்கவில்லை. க்ரியான் முன்னிட்ட மொழிகளை ஏற்று இருமுறை அன்னாருக்கு அழைப்பிட்டேன். இதுவரையில் அவர் இங்கு ஏகாமலிருப்பது விந்தையே.

பாணர்

பலகாலந்தொட்டுச் சில வதந்திகள் உலவுவதை நானும் அறிவேன். ஆயின் என்? அவை வெறும் பிதற்றல்களாயிருத்தல் கூடும்.

எடிபஸ்

அவற்றையும் எடுத்துரைப்பீர்; எல்லாவகைக் கூற்றுக்களையும் வினவ விழைகின்றேன்.

பாணர்

யாரோ சில வழிப்போக்கர்கள் வேந்தனை வீழ்த்தியதாகக் கூறப்பட்டது.

எடிபஸ்

என் காதில் விழுந்ததும் அவ்வகைத்தே. ஆயின் அவர் மாய்ந்து வீழ்ந்ததை நேரில் கண்டவன் எவனோ அவனை அறிந்தவர் எவருமிலரே.

பாணர்

அச்சத்தால் வினையழி வீதென்று
நிச்சய மாயுணரெவனும், நீவிர்
பறை சாற்றிய படுசாபத்தைக் கேட்
டறவே நடுங்கிய கண்டோனுடுவனே.

எடிபஸ்

இழிசெயலில் இறங்கத்துணிந்தவன் பழிச்சொல்லுக்குப் பயப்படானே.

பாணர்

அத்தகையோனை அண்மையில் சுட்டும்
ஆண்மை நம்முன் அவிர் தருகின்றது
உம்பர்தம் ஊக்கம் உளத்தே பெற்று
உண்மையே யுருவாயொளி ரோருத்தமன்
ஈண்டு நம்முன் இனிதே காண்போம்.

(தீர்க்கதரிசி டைரீஸியஸை ஓர் இளைஞன்
கைகொடுத்து இட்டு வருகின்றான்).

எடிபஸ்

சுக நோக்குடைய டைரீஸியஸ் ஆன்றோரே, வருக. தங்கள் தெருட்சிக்கு எட்டாதது ஏதுமிலது. கூத்தர் தம் கொள்கைகள், மறைந்துறையும் மர்மங்கள், விண்ணிலும் மண்ணிலும் நிகழ் பவை அனைத்தையுமே, அந்தகனே என்றாலும், உள்ளுணர்வு கொண்டு கசடறக் காணவல்லீர். இந்நகரைப் பீடித்துள்ள தொத்துநோய் எத்தகைத்தோ பகர்வீர். எங்கள் நாட்டுக்கு அரணாய் அமைந்து எம்மைக் காக்கும் பொறுப்பு உம்மையே சாரும். முன்னறிவு படைத்த தெய்வ வாக்கின் உதவியை நாடினோம். அது அளித்த விடைகளின் சாரத்தைத் தூதுவர்கள் பால் கேட்டிருப்பீர், எங்கள் துயரைத் துடைப்பதற்கு ஒரே வழிதான் ; [லேயிஸ் வேந்தனை வெட்டித்தள்ளிய வெறியர்களைத் தேர்ந்தறிந்து அவர்களைக் கொலை செய்வதோ, அன்றி நாடு கடத்தலோ இன்றியமையாதென்பதே.] சான்றோரே, தம்மில் கோயில்கொண்ட முக்கால வுணர்வின் ஆற்றலைத் தயக்கமின்றி வெளிப்படுத்துவீராயின் தங்கள் மேன்மை ஓங்கி இலங்கும், நாட்டின் நலிவு நீங்கும். மன்னனும் என்னுடைய மாண்பும் மங்காது மிளிரும். அவ்வெங்கொலையின் விளைவாகத் தீட்டுற்ற இந்நாட்டைப் புனிதப்படுத்துவதற்குத் தங்களையே தஞ்சம் புகுகின்றோம். ஒரு மாந்தனின் தனிச்சிறப்பு மன்பதையின் ஆக்கத்திற்குத் தனது ஆற்றலனைத்தையும் வாரி வழங்குவதே யன்றோ ?

டைரீஸியஸ்

அந்தோ, அந்தோ ! பேரறிவின் பயனாகப் பலிதமொன்றும் காணாப்போது அவ்வறிவின் விளைவு வெந்துயரே. இம் மூதுரையை மறந்தேனே ! அதைப் புறக்கணித்த குற்றமே இங்கு நான் ஏகியது.

எடிபஸ்

உம்முடைய வாதை என்னே ? வெய்துறல் எதற்கோ ?

டைரீஸியஸ்

வந்த வழியே மீண்டேக விடை தருவீர் ; குறுக்கிடாதீர். தங்கள் சுமையைத் தாமே தாங்குவது நலம். என் பொறுப்பை நானே தரிப்பேன்.

எடிபஸ்

தாங்கள் உரைப்பது நாணக்கேடு. தெய்வவாக்குத் திறனைப் புறக்கணிப்பது உண்மையான நாட்டுப் பற்றுடைய ஒருவனுக்கு எள்ளளவும் ஏற்பாகாது.

டைரீஸியஸ்

அரசே, தங்கள் சொற்கள் சந்தர்ப்பத்திற்கு முரணானவை. நானும் அதுவேபோல் இடறி விழுவேனோ என்கிற அச்சம்.......

எடிபஸ்

தாங்கள் அறிந்தவை யனைத்தையும் அறிந்தவாறு அறை வீராக, பின்னிடாதீர் ; இறைஞ்சிக் கேட்கின்றோம்.

டைரீஸியஸ்

தாங்கள் பேசும்வகை பகுத்தறிவின்மையைச் சுட்டுகிறது. நான் படும் அல்லல்கள் என் வாய்நின்று எஞ்ஞான்றும் வெளி வரா. உம்மைப் பீடித்துள்ள ஊறுகள் குறித்தும் வெளியிட மறுக்கின்றேன்.

எடிபஸ்

அங்கனமெனின், யாவும் நீர் அறிவீரென்றாலும் அவற்றைப் புலப்படுத்த மாட்டீர் என்பதா? எங்களுக்கு இரண்டகம் இழைத்து நாட்டையும் நிலைகுலைத்தவாறாகுமே.

டைரீஸியஸ்

பொருளற்ற அலைக்கழிவு எனக்கும் வேண்டாம், தங்களுக் கும் வேண்டாம், என்வாய்விட்டு ஒன்றுமே வெளிவராது, வீணே வினவுகின்றீர்.

எடிபஸ்

இரக்கமற்ற அரக்கனே! உந்தன் வாயடைப்பு கருங்கல்லுக் கும் சினத்தைக் கிண்டிவிடுமே. உன் நாவை நெகிழச் செய்யும் வகைதான் யாதோ? உன் கடின இதயத்தை உருகச் செய்யும் கருவிதான் எத்தகைத்தோ? தன்மூப்பான உன் மௌனத்தை முறிக்கும் மருந்தொன்று இலதோ?

டைரீஸியஸ்

எனது மனப்பண்பைப் பலவாறு பழிக்கின்றீர். உமது பிடிவாதப் பான்மை உடன்பிறந்தது போலும்! எல்லையற்று என்னை ஏசுகின்றீர்.

எடிபஸ்

இந்நாட்டை இவன் இறுமாப்புடன் இழிவுபடுத்துவதைக் கண்டு எவனே முனிவுறுன்?

டைரீஸியஸ்

வாய்மடுத்து நான் வாளாவிருந்தாலும் நிகழ்வது நிகழ்ந்தே தீரும்.

எடிபஸ்

அவ்வாருயின், வாய்விட்டு வெளியிடுவதே உன் கடமை யாகுமே.

டைரீஸியஸ்

நான் கூறியதற்குமேல் மற்றும் வெளியிடுவதற்கு ஒன்றுமே யில்லை. மனம்போல் சீறிவிழுங்கள்; உம்முள் குமுறிக் கொண்டிருக்கும் சீற்றப்புயல் வாரி வீசட்டும்.

எடிபஸ்

உண்மை; எல்லையில்லாச் சினம் என்னில் வீறிட்டு எழுகின்றது. என் உட்கருத்தைத் தயக்கமின்றி வெம்மொழிகளில் வீசியே தீருவேன். அந்தப் படுகொலைக்குத் திட்டமிட்டவன் நீயேயாவாய்; அதை நிறைவேற்ற வழிவகுத்தவனும் நீயே. விழி இழந்த கபோதியாய் நீ இல்லாமலிருந்திருப்பின் உனது கரம் கொண்டே மன்னனை நீ மாய்த்திருப்பாய் என்று அறுதியிட்டு அறைவேன்.

டைரீஸியஸ்

ஓகோ! அத்துணை உறுதியா? அந்தத் தீச்செயல் எவரால் புரியப்பட்டிருப்பினும் சரி, கொலை செய்தவன் குறித்துத் தாங்கள் சாடிய சபதத்தை நிறைவேற்றுவீராக. என்னிடமோ, இங்குக் குழுமியிருப்போர் முன்னிலோ நீவிர் இனி உரையாடுவதற்கிடமில்லை. இந்நாட்டை மாசுபடுத்திய கயமை தம்மையே சாரும்; மன்னனை மாய்த்தது உமது கரம் கொண்டே.

எடிபஸ்

பழிமொழி பேசும் புல்லியனே, சுடுசொற்கள் சொரிகின்றுய். நிமித்தகன் என்ற செருக்கில் தண்டனையினின்று தப்பித்து விடுவாய் என்ற எண்ணமா?

டைரீஸியஸ்

ஐயமேன்? வாய்மை வலிமையே எனக்கு அரணுய் அமையுமே.

எடிபஸ்

உனக்கு அறிவு கொளுத்தியவர் யாரோ? உன் நிமித்திகக் கலைத்திறன் அளித்த ஆக்கத்தின் விளைவு அது என்று எண்ணு தற்கிடமில்லை.

டைரீஸியஸ்

என் மனக்கோளுக்கு மாருக மொழியுமாறு தூண்டு கின்றீரா?

எடிபஸ்

உன் பேச்சு விளங்கவில்லையே, ஐயம் அகலுமாறு மீண்டும் அறைந்திடுவாய்.

டைரீஸியஸ்

உண்மையாக விளங்கவில்லையா? அன்றி மேன் மேலும் தூண்டிக்கொண்டே யிருப்பீரா?

எடிபஸ்

உன் பேச்சின் கருத்தை அரைகுறையாகவே அறிகின்றேன் எனலாம்; மீண்டும் பொழிவையே.

டைரீஸியஸ்

மன்னனை எவன் மாய்த்தானே அவன் யாவன் என்பதை அறிய முனைகின்றீர். ஆணித்தரமாக அறைகின்றேன், அந்தப் பாதகன் நீவீரே.

எடிபஸ்

இவ் இழிவான பழிச் சொல்லை இருமுறை பகன்ருய்; அதன் தீப்பயனைத் துய்த்தே தீருவாய்.

டைரீஸியஸ்

உம் கொந்தளிப்பைக் கிளறும் வகை மேலும் கூறவா?

எடிபஸ்

மனமாரப் பிதற்றுவாய்; உன் பேச்செல்லாம் மூச்சுக்கேடே.

டைரீஸியஸ்

நான் கூறுவதைக் கூர்ந்து கேட்பீர் ; மிக நெருங்கிய உறவி னருடன் இழிவாழ்க்கை நடத்தி வருகின்றீர் ; உமது நாணக் கேட்டை உணர்ந்தீரில்லை.

எடிபஸ்

வாய்க்கு வந்தபடியெல்லாம் தூற்றுகின்றாய் ; வெங் குற்றத்துக்கு ஆளாவாய், திண்ணம் அது.

டைரீஸியஸ்

உண்மைக்குப் புறம்பாய் உரைப்பேனாயின் அக் குற்றச் சாட்டு என்னைச் சாரும்.

எடிபஸ்

புறம்பு தான் ; அக்குற்றக்சாட்டு உன்னைச் சார்ந்தே தீரும். உனக்கோ கண்ணில்லை, காதில்லை, புலனில்லை, எல்லாவுணர் விலும் அந்தகன் நீ.

டைரீஸியஸ்

அந்தோ ! அறிவிலி, வீணே என்மீது தூற்றுமொழி வீசு கின்றீர் ! அம்மொழிக்கு உரித்தானவர் நீவீரே என்பதை ஈண்டு ளோர் யாவருமே சாற்றுவதை விரைவில் காண்பீர்.

எடிபஸ்

ஈறிலா இருளின் தோன்றலே, என்மீதோ, கதிரவன் கருணை வாய்ந்த மற்றொருவர் மீதுமோ உன் வீரம் விழலாகும்.

டைரீஸியஸ்

உமது விதியின் முடிவை விதிப்பவன் நானல்லன். ஆண்டவன் தொண்டனும் அப்போலோ தெய்வத்தின் பொறுப்பு அதுவாம்.

எடிபஸ்

இந்த உன் இட்டேற்றமெல்லாம் க்ரியான் கையாண்ட சூழ்ச்சியின் விளைவா, அன்றி உன் கற்பனையின் விளையாட்டா ?

டைரீஸியஸ்

இப்பழிப்புக்கு என்னளவும் க்ரியான் உள்ளாகான். உம் தீவினைக்கு ஊற்றுக்கண் நீவீரே.

எடிபஸ்

செல்வப் பெருக்கோ, செங்கோலின் வலிமையோ, மேதையின் மாண்போ எத்துணை ஏற்றமாயிருப்பினும் வாழ்க்கைச் செருக்களத்தில் வன்மமும் பொறாமையும் தாக்கப்புகுமாயின் அவை யாவும் விழலே. இந்நாடு தனது அன்புக் கரத்தால் கொற்றவன் கிரீடத்தை எனக்குச் சூட்டியது; அது நான் அவாவுடன் நாடிப்பெற்ற ஒன்றன்று; ஆண்டவன் அருட் கொடையேயாம். எனது அணுக்க நண்பன் எனக்கருதி நான் முழு நம்பிக்கை வைத்திருந்த க்ரியான் அரச மகுடத்தைத் தானே சூட்டிக் கொள்ள வேணவாக் கொண்டு என்பால் அதைப் பறிப்பதற்குற்ற தருணத்தை நோக்கி நின்றான். இதோ இந்த ஏய்ப்புக்காரமாயாவியை, சுயநலமொன்றிலேயே ஊக்கங்கொண்ட இந்தப் பித்தலாட்டக்கார வீம்பனை விலைக்கு வாங்கிப் பயன் படுத்தியுள்ளான். இவனோ வெறும் வேஷத்தில் நிமித்தகனே யன்றி அக்கலையில் அடியோடு அந்தகன். என்ன, நிமித்தகனே, வருவது கூறும் வல்லமையில் இதற்கு முன் எப்போதாவது வெற்றி கண்டதுண்டோ? இரட்டுற மொழியும் அந்த அரக்கி இங்கேகிய போது துயரில் தோய்ந்த இந் நாட்டு மக்களை உய்விக்கும் வழியொன்று வாய்த்ததே? அவர் அறைந்த மொழிகளின் உட்கருத்தை உணரப்புகுவதெலாம் வெறும் ஊகமேயாகும். தேர்ந்த ஒரு தீர்க்கதரிசியே அதை விடுவிக்க இயல்வான். இத்துறையில் நீ திறனற்றவன் என்பது வெள்ளிடை. புள்ளினத்தின் கொக்கரிப்போ, விண்ணுலகின் அறிகுறியோ உனக்கு உதவி புரியவில்லை என்பது கண்கூடு. அப்போது பேதைமை எடிபஸாம் நான் தலையிட்டேன். அவ்வரக்கியின் வீண்பேச்சை அடக்கினேன்; முன்னறிவுத்திறன் கொண்டன்று, இயலறிவு கொண்டே. அத்தகைய என்னைக் கள்ளத்தனமாக வீழ்த்தி, க்ரியானுக்கு முடிசூட்டி அன்னோடு இனிதுவாழக் கருதுவதே யன்றோ உனது ஆர்வம்? பிறர் புரிந்த பொல்லாங்குக்கு என்னை ஆளாக்கச் சதி செய்யும் உனது துணையாளனும் கடுமையான இடும்பைக்கு இரையாதல் தவறாது. நரைமயிர் முதியோனே யென்றாலும் துடுக்குச் செயலுக்குற்ற தண்டனை எத்தகைத்து என்பதை ஓர்ந்தாயில்லை.

பாணர்

எடிபஸ் ஏந்தால், நீவிருமவரும்
பழிமொழி பற்பல பரிமாறினிரே;

இத்தகை வாய்ப்போர்க் கீண்டிடிமிலதே
நிமித்தகர் நவின்றதை நிறைவேற்றும் நன்
னெறி குறித்தூன்றி ஆய்தல் நேர்மை ;
அரும்பெரு நலனை நல்குவததுவே.

டைரீயஸ்

கொற்றவர் நீர் என்றுலும் தடுப்பற்றுவிடைபகரும் சுதந்திரம் எனக்கில்லாமலில்லை ; இம்முறையில் உமக்கு நான் ஈடானவனே. லோக்ஸியாஸ் தெய்வம் ஒன்றுக்கே நான் அடிபடிந்தவனேயன்றி, க்ரியானின் அடியாளாக நான் என்றுமே துணைபுரியேன். உம் இட்டேற்ற மொழிகளுக்கு நான் அளிக்கும் மாற்றுரை இஃதாம்: நோக்கிழந்த என்னை நையாண்டி செய்யத் துணிந்தீர் ; உமக்குக் கண்ணிருந்தும் காட்சியில்லை. எந்த இழுக்காற்றில் வீழ்ந் துள்ளீர் என்பதை அறிந்தீரில்லை. உமது குடியிருப்பை அறியீர்: மணவறையில் நீர் மகிழ்ந்துறையும் மங்கை இன்னுளென்பதை முற்றிலும் அறியீர். உமது குலமுறை உமக்குத் தெரியாது. எனவே, வாழ்வோர், மாண்டோர் இருவகைச் சுற்றத்தாருக்கும் பகையானீர். முன்பின் அறியாத பேதைமையின் தீப்பயனே இவையெனினும் தாய் தந்தையர்களுக் கிழைத்த தீவினையின் சாபக்கேடு, வஞ்சம் தீர்ப்பது தவருது ; இரு முனைவாளேபோல் உம்மைத்தாக்கி நாட்டினின்று துரத்துவதைத் தவிர்க்கவியலாது. செவ்விய கண்படைத்த உம்மை முடிவிலாப் பேரிருளில் மூழ்த்தி விடுவது திண்ணம். நீர் வித்திட்ட ஆவளியின் பேரிழிவை உணருங்கால் உம்மில் எழும் வெந்துயரின் கூக்குரல் கேட்காத இடமொன்று இருத்தலரிது. ஸிதரோன் மாமலையின் கருங்கற் பாறைகளனைத்திலுமே உமது புலம்பல் எதிரொலிக்கும். உம்மையும் உம்முடைய மகளிரையும் ஒருமித்துப் பீடித்திருக்கும் விழுமநீர் வெள்ளத்தை உம்மால் கற்பனை செய்யவும் இயலாது. என் சொற்களையும் க்ரியான் கூறியதையும் நீர் நிந்தித்தல்கூடும். ஆயின் அறிவீர், பருவரலில் பாய்ந்தோருள் உம்மினும் பாதகனை இப்பாருலகில் காண்பதரிது.

எடிபஸ்

இக்கயவனின் நிந்தை மொழிகளை நான் பொறுக்க வேண் டுமா? தொத்து நோய் உன்னைப் பிடிப்பதாக! அகல்வாய், இங்கிருந்து ஒழிந்திடுவாய்; இனி என் வாயிற்படி அணுகாதே.

டைரீஸியஸ்

உமதழைப்புக் கிணங்கி வந்தேனேயொழியே நானாக வந்தே னில்லையே.

எடிபஸ்

உன் பேதைமையை உணர்ந்திருப்பேனாயின் இவ்வழைப்பு நேர்ந்திருக்காது.

டைரீஸியஸ்

ஓகோ! உம் கருத்தில் நான் ஒருபேதையே ஆயின். உம் பெற்றோர் கருத்தில் நான் சான்றோனே.

எடிபஸ்

நீ இயம்பியதென்னே? என் பெற்றோரா? என்னை ஈன்றோர் யாவர் என்பதை அறிவையோ? பகர்வாய்.

டைரீஸியஸ்

நீர் பிறந்த நாளும் இதுவே ; உம் மரண தினமும் இன்றே.

எடிபஸ்

கட்டுக்கதை அளப்பதிலும் சுடுமொழி சாற்றுவதிலும் பேரவா உனக்கு.

டைரீஸியஸ்

அவற்றின் உட்பொருளை விள்ளுவதில் ஒப்பற்ற நுண்மாண் படைத்தவர் நீவிரே.

எடிபஸ்

எனது சான்றாண்மையைக் குத்துமொழிகளில் பாராட்டு கின்றாய். அதன் நோக்கந்தான் என்னே?

டைரீஸியஸ்

உம் அழிவுக்கு அடிகோலியதும் அந்தச் சான்றாண்மையின் விளைவே என்பதுதான்.

எடிபஸ்

அதன் வல்லமை கொண்டே இந்நாட்டைக் காப்பாற்றினேன் என்பதை உணர்வாயாக.

டைரீஸியஸ்

போதும், போதும், இனி இங்குத் தங்குதல் வீணேயாம்; யாரடா அங்கே? சிறுவனே, என் கரம் பிடித்து இட்டுச் செல் வாய்.

எடிபஸ்

கடு விரைவாக இட்டுச்செல் பையனே; இனி அவர் இங்கிருப்பது பெருந்தொல்லேயே; நான் பூண்டுள்ள செயலுக்கு முட்டுக் கட்டையே, தொலேந்திடுவாய்; என்னேப் பிடித்த கடும்பிணி நீங்கியவாறும்.

டைரீஸியஸ்

நான் ஏகுவது திண்ணம். இங்கு நான் தலேகாட்டியதின் கருத்தை முதற்கண் விளக்குவேன். உம் சீற்றத்துக்கு நான் அஞ்சுபவனல்லன். என்னே எவ்வகையிலும் துன்புறுத்த உம்மால் இயலாது. செவிசாயுங்கள்: (அச்சுறுத்தியும் அரசாணே கொண்டும் எவனொருவனேக் கண்டுபிடிக்க இது காறும் முயன்றீரோ, மன்னன் லேயிஸை மாய்த்த அந்தத் தீயோன் இங்கேயே காட்சியளிக்கின்றான். பிறநாட்டைச் சார்ந்தவனெனத் தன்னேக் கருதுகின்றானெனினும் அவன் பிறந்த இடம் இந்தத் தீப்ஸ் நகரே யென்பதைக் கடு விரைவில் அறிந்தே தீருவான். பேரதிருஷ்டம் வாய்க்கப்பெற்றானெனினும் அவன் துய்ப்பது கடுந்துயரே. விழி இழந்து, ஐயக்கடிஞை கையிலேந்தி, சாய உடை உடுத்து முன்பின் அறியாத நாட்டை நோக்கித் தடிதாங்கித் தடுமாறிச் செல்பவனவன். அவனுடைய இல்லத்தில் வளர்ந்து வரும் சேய்களுக்கு உடன்பிறந்தானும் அவனே, தந்தையும் அவனேயாவன். அவனே ஈன்ற அணங்கையே கரம் பிடித்துத் தனது இல்லாளாய் வாய்க்கப்பெற்றான்.) தனது தந்தையின் உயிர் குடித்த தீயோனும் அவனே. வேந்தனே, நான் தெரிவிக்கக்கூடிய அனைத்தையும் சொல்லித் தீர்த்தேன். மாளிகைக் குட்புகுந்து இம் மொழிகளே ஆய்ந்து சிந்திப்பீராக. என் உரைகள் உண்மைக்கு முரண்பட்டவையெனத் தேர்வீராயின் எனக்கு அறிவுமில்லே, வருவது கூறும் வல்லமையுமில்லே எனக் கொள்வீராக.

(டைரீஸியஸ், எடிபஸ் இருவருமே மறைகின்றனர்)

பாணர்

நாவும் நவிலரும் கொடுமை நயந்தே
குருதிதோய் செங்கை கொண்டே புரிந்த
கயவன் யார்கொல் கழறுவீர் நீரே.
தெய்வக் குன்று டெல்ஃபி தேர்ந்த
அந்தத் தீயோன் யாரோ அறிந்திலேன்!
காற்றிலும் கடிய பரியின் விரைவோ
அவன் செயும் ஓட்டம் அதையும் வெல்வன்;
இறைவன் ஜூஸ் ஈந்த அப்பலோ
அசனிவீசியே அவன் மிசைப் பாய்வன்
அவன் பின்தொடரும் அறம்பிறழா விதியுமே.
பனிபடர் பர்னஸ் விடுத்த செய்தியே
பார்மிசை எங்கணும் பரவப் பார்ப்பீர்
விதித்த தண்டனை விலக்கற் பாலதோ?
வெற்றிகொள் விடையென விரைவில் ஏகும்
அவன்தன் நீணெறி அமைதி அளிக்குமோ?
காட்டிலும் குன்றிலும் கடப்பரு மழையிலும்
தன்னந்தனியாய்த் திரியும் கயவனை
விதிதான் விடுமோ விளம்புவீர் நீரே.
அறிஞர் அறைந்த அச்சம் குடிகொள் குறிசொலை
ஏற்கவும் இயலேன் மறுக்கவும் ஆற்றேன்;
மேல்வினை கருதியே மெய்தான் விதிர்க்கும்
நிகழ்வினை வருவினை நினைவில் நேருமோ?
தொல்குலத் தோன்றல் எடிபஸ் வான்புகழ்
மாசுறும் மாவினை கழிந்த நாளிலும்
இல்லை காண்; இன்றும் புவியில் நிலவுமோ?
கண்படாக் கொலைதனைக் கண்டே வெஞ்சினம்
தீர்த்த செயல்தனை தெரிந்திலம் யாமே.
மண்ணகந்தனிலே விரியும் மாச்செயல்
விளைவினை விரைவில் இறைவனே ஓர்வன்;
அவன் செயல் அப்பலோ அறிவன் தானே.
மனிதன் மனிதனைக் கடப்பன் அறிவிலே
எனினும்,
நம்பேன் சான்றோன் நவின்ற சொல்தனை
வாளா இருப்பன் வாழ்நாள் முழுதும்
சான்று சட்டெனக் காணுவிடத்தே
அந்நாள் விரைவில் வந்த அத்திரு

அவர்தம் அறிவு கண்டே வியந்தனள்.
நாட்டுச் சேவை நயம்படப் புரிந்தே
நிறுவினர் நீர்புகழ் மண்ணகம் போற்றவே
என்தன் அகவுரை கொண்டே இகழேன்
குற்றம் கூறேன் குரிசில் மீதே.

(க்ரியான் நுழைகின்ருர்)

க்ரியான்

நண்பர்களே, இந்நாட்டுக் குடிமக்களே, கழிபெருங் குற்றச் சாட்டை எடிபஸ் வேந்தன் என்மீது சாற்றியுள்ளதாக அறி கின்றேன். இடித்துரைத்து அதை மறுப்பதற்கே ஈண்டு இங்கு வந்துள்ளேன். இப்போது நாம் தோய்ந்திருக்கும் துன்ப நிலைமையில் சொல்லிலோ, செயலிலோ அவர் உள்ளத்தைப் புண்படுத்தி எவ்வகையிலாவது அவருக்குத் தீங்கிழைத்திருப்ப தாக அவர் எண்ணுவாராயின் என் ஆயுளை நீடிக்க நான் விரும்ப வில்லை. மாண்பிழந்த வாழ்க்கை இருந்தென்ன, போயென்ன? ஏதோ ஒருவகையில் நிந்தனைக்கு உள்ளாவதோடன்றி அரசாங் கத்திற்கு நேயர்களாம் உங்களுக்கும் தீங்கிழைத்ததாகப் பொது மக்களால் குற்றம் சாட்டப்படுவேனுயின் என் பெயர் அறவே கறைப்பட்டதாகுமன்ருே?

பாணர்

அரசனறைந்த அப்பழி மொழிகள்
ஆழ்ந்த வுணர்ச்சி யினலைகளாகா,
கடுகடுவெனச் சுடுகடுகு வெடிப்பென
வெடுக்குதனைச் சிந்திய வெற்றுரையெனலாம்.

க்ரியான்

இட்டுக்கட்டான குற்றச்சாட்டை வேந்தன்மீது வீசும்படி தீர்க்கதரிசியை நான்தான் தூண்டினேன் என்று எண்ணத் துணிந்தவர் யாராவது உண்டா?

பாணர்

அவ்வகை நினைத்தவர் ஒரு சிலராவர்
ஆயின் அறியேன் அவர்தம் நோக்கம்.

க்ரியான்

அத்தகைய அடாத குற்றச்சாட்டை என்மீது சுமத்தியதை நம்பியவர்களுடைய நுண்ணறிவும் கற்பனைத் திறனும் விடை பெற்றனவா?

பாணர்

அன்னோரறிவை அளக்குந் திறனிலன்,
ஏந்தல் மொழியை ஏற்பது ஒன்றே
என்றன் மரபு, பிறருரை மதியேன்
அஃதோ!
அரசன் அவரே, அணுகல் காண்பீர்
வினவுமனைத்தும் நேர்விடை பெருமே.

(எடிபஸ் நுழைகின்றார்)

எடிபஸ் (க்ரியானை நோக்கி)

என்ன அப்பனே, என்ன கொம்மாளம் இங்கு? என் மனையருகே கால்வைக்கத் துணிந்தாயே! சீரிழந்த சோரனே, என்னை மாய்க்கத் திட்டமிட்ட மாயாவி நீ; என் மகுடத்தைப் பறிக்கப் பூண்ட பாதகனே, சற்று நெருங்கி வந்து என்உசாக் களுக்கு உரையளிப்பதாய், என்மீது சதி செய்ய முனைந்தாயே. வெற்றி காண்பையோ? கோழைத்தனமோ, மதிமயக்கமோ, எப்போதாவது என்பால் நீ கண்டதுண்டோ? காரிருளில் கரவாய் ஊர்ந்துவரும் கருநாகத்தைக்காண இயலேனென்றோ, அன்றி; கண்டாலுமே அதைக் கீறிக்கொல்லும் துணிவற்றவ னென்றோ என்னைக் கருதினாய் போலும்! உன் தீய நோக்கத் திற்கு ஆக்கந்தரும் குருபலமும் நட்பினமும் வாய்க்கப் பெற வலை வீசுகின்றாய். அவ்விருபாலரின் துணைவலி உனக்கு இலதாயின் வீழ்ச்சி திண்ணமன்றோ? அன்றியும் செல்வச் செறிவும் இன்றியமையாது. இவை யொன்றுமே உனக்கில்லாத நிலைமையில் எனது அரச மௌலியை நீ கைப்பற்ற இயலுமோ? வீணாசை!

க்ரியான்

சற்றே செவி மடுப்பீர். தாங்கள் சொல்ல நினைத்ததைச் சொல்லிவிட்டீர்; விடை பகர்வது இப்போது என் கடமை; அதைக்கேட்ட பிறகு தக்க முடிவுக்கு வாருங்கள்.

எடிபஸ்

வாய்ப்பேச்சு வீரன் நீ. உன் குணத்தைச் சரிவர அறிந்து கொள்வதில் சற்று மந்தமதியுடையவன் நான். ஆயின் ஒன்று நிச்சயம்; வன்மம் மண்டிய பகைமை உன்னிடம் குடிகொண் டுள்ளது.

க்ரியான்

அந்தப் பிழையான கருத்தை மறுதளிப்பது எனது முதற் கடமையாகும்.

எடிபஸ்

வஞ்சகனல்லன் நீயென வழக்காடப் புகுவாய் போலும்!

க்ரியான்

அதட்டும் பிடிவாதம் ஒரு தனித் திறமையெனக் கொள்வீ ராயின் நன்னெறி தவறியவராவீர்.

எடிபஸ்

உறவினனுக்கு ஊறுவிளைவித்தும் தண்டனையினின்று தப்ப வியலுமென நினைப்பாயின் அது பெரிய ஏமாற்றமே யாகும்.

க்ரியான்

உம்மொழியை முற்றிலும் ஏற்கிறேன். நீர் எடுத்துக் காட்டும் அக் குற்றந்தான் என்னே? விளக்குவீரே.

எடிபஸ்

நிமித்தகருக்கு அழைப்பிடுமாறு எனக்குப் புத்திபுகட்டியது நீயேயன்றோ? அதை மறுக்க முடியுமா?

க்ரியான்

முற்றிலும் உண்மை. அதை வற்புறுத்தியவன் நானே.

எடிபஸ்

எத்தனை ஆண்டுகளுக்கு முன் 'லேயிஸ்'...........

க்ரியான்

லேயிஸ்...... ..? உங்கள் வினா சுட்டுவது விளங்கவில்லையே.

எடிபஸ்

வஞ்சக்கரம் கொண்டு கொலையுண்டாரா?

க்ரியான்

அது நிகழ்ந்து பல்லாண்டுகள் பாய்ந்து விட்டனவே.

எடிபஸ்

அந்த நிமித்தகன் அந்நாட்களிலும் நிமித்தகக் கலையைக் கையாண்டு வந்தானு?

க்ரியான்

ஆம், இப்போதேபோல் அப்போதும் தம் கலைத்தொழிலில் சிறந்து விளங்கியவரே.

எடிபஸ்

அக்காலத்தில் என் முகத்தை அவன் எப்போதாவது ஏறிட்டுப் பார்த்திருத்தல் கூடுமோ?

க்ரியான்

பார்த்திருக்க முடியாதென நினைக்கிறேன்; என்னறிவுக் கெட்டிய வரையில் இல்லை, நான் அருகிலில்லாதபோது என்னவோ, யார் அறிவர்?

எடிபஸ்

அந்தக் கொலை குறித்து ஆய்ந்தறிவும் முனைவு மேற் கொள்ளப்படவில்லையோ?

க்ரியான்

முழு முயற்சி கையாளப்பட்டது, ஆனல் இம்மியும் பயனளிக்கவில்லை.

எடிபஸ்

அந்த நிமித்தகன் இப்போது அளந்த கதையெல்லாம் அப்போது அளக்கத் தவறியதேனே?

க்ரியான்

நானறியேன். அறியாத ஒன்றைக் குறித்து மௌனமா யிருப்பதே நலம்.

எடிபஸ்

உனக்குத் தெரிந்தது அம்மட்டே. திண்ணமாக ஏதொன் றையும் உன்னல் இயம்பவியலாது, அல்லவா?

க்ரியான்

உங்கள் வினவின் உட்பொருள் விளங்கவில்லையே. எனக் குத் தெரிந்ததனைத்தையும் கரவற்றுக் கூறுவேன்.

எடிபஸ்

உன்னுடைய ஏவுதலுக்கு இணங்கியே லேயிஸ் கொலை யுண்ட பழியை அந்த நிமித்தகன் என்மீது சுமத்தினன், அதை மறுப்பையோ ?

க்ரியான்

அப்பழியின் மெய்ம்மையையோ பொய்ம்மையையோ திண் மையாகத் தெரிவிக்கக் கூடியவர் நீவீரே. அந்தத் தீவினையைச் சார்ந்த விவரங்களைப் பற்றித் தங்களை வினவும் உரிமை இப்போது எனக்குண்டு.

எடிபஸ்

உன் மனம்போல் என்னை உசாவி அக்கொலையாளி நான் தான் என மெய்ப்பிப்பாய், பார்ப்போம்.

க்ரியான்

ஏற்கின்றேன், என் உடன் பிறந்தாளுக்கு, மாலையிட்டீர், அல்லவா ?

எடிபஸ்

பளிங்கு போன்ற உண்மைக்கு மறுப்பேது ?

க்ரியான்

இந்நாட்டுத் தலைவன் துணைவி என்ற உரிமை கொண்டு அரசோச்சுவதில் அவளுக்குப் பங்கு உண்டன்றோ ?

எடிபஸ்

அவள் விழையும் எதையும் மனமுவந்து நல்கி வரு கின்றேனே.

க்ரியான்

உங்கள் இருவருடன் என்னையும் பிணைப்போமாயின் நாம் மூவருமே அந்த மாட்சிமையில் பங்கு பெற்றவர்களாகின்றோ மல்லவா ?

எடிபஸ்

ஆம், அவ்வுரிமை உனக்கிருப்பது பற்றியே வஞ்சகனாய் வினைபுரியும் வாய்ப்புப் பெற்றாய்.

**க்ரியான்**

என்னைச் சார்ந்த நன்மை தீமைபற்றி எனக்குள் நான் எப்படிப் பரியாலோசனை செய்வேனோ அதுவேபோல் உங்கள் நலனுக்கு உகந்தது எது, அல்லாதது எது என்பது குறித்து யோசிக்கப் புகுவீராயின் என்னைச் சாடிய முறை ஒவ்வாதென உணர்வீர். சற்றுக் கவனித்துக் கேளுங்கள். கடுந்தொல்லைகள் மண்டிய ஆட்சிப் பொறுப்பை ஒருவன் விரும்புவானா, அன்றி அத்தகைய பொறுப்பை ஏற்றுக் கவலையற்ற அமைதியை இழக்கத் துணிவானா? என்னைப்பற்றிய வரையில், புரவலன் என்ற பட்டத்தை வகிப்பதில் எனக்கு எத்தகைய ஆர்வமும் கிடையாது. மாண்புடைய செயல்கள் ஆற்றுவதே எனது குறிக்கோள். விவேக புத்தியுடையவர்கள் யாவருமே அந்தச் சிறப்பைத்தான் விழைவார்கள். என்னுடைய தேவைகள் யாவும் தங்களுடைய அன்புகொண்டு நிறைவேற்றப்பட்டு வருகின்றன. ஆகவே எத்தகைய குறைபாட்டுக்கும் இடமேயில்லை. அவ்வாறிருக்க, நான் ஓர் அரசனாகத் திகழ்வேனாயின் என் கருத்துக்கு மாறாகப் பல்வகைச் செயல்களில் ஈடுபடும் நிலைமை ஏற்படும். எனவே, எல்லையற்ற செல்வாக்கின் சிறப்புக்களைச் சுவைத்து இனிதுறும் எனக்கு அரச பதவியில் ஆர்வம் எழுமோ? சாரத்தைச் சுவைத்து வரும் வாய்ப்பை விளக்கி வெறும் சக்கையில் மோகங்கொள்ளும் மதிமயக்கம் என்பாலில்லை. 'ஆண்டவன் அருள் பொழிக' என்ற வாழ்த்தொலியை மக்கள் என்பால் சொரிகின்றனர். மன்னனும் தங்களுடைய அன்பையும் நன்மதிப்பையும் பெறுதற் பொருட்டு என்னுடைய உதவியை நாடுகின்றனர். எனவே, பெருமையைப் புறக்கணித்துச் சிறுமையை விழைவதற்கு நான் ஒரு பேதையா? அல்லனே அல்லன். பட்டம் பதவி என் உள்ளத்தைக் கவர்ந்ததேயில்லை; அவற்றில் மோகம்கொண்டு எத்தகைய சூழ்ச்சியிலும் பங்கு கொள்ளேன். என் மொழிகளில் தங்களுக்கு ஐயமெழுமாயின் அப்போலோ தெய்வம் கோயில்கொண்ட டெல்ஃபி நகருக்குச் சென்று கடவுள் தெரிவித்த அறிக்கையைப் பற்றி நான் முன்பு வெளியிட்ட செய்தி உண்மைதானா என்று உசாவுவதே உங்கள் முதற்கடமையாகும். அதைத் தொடர்ந்து, நிமித்தகருடன் இணைந்து நான் சதியோ சூழ்ச்சியோ செய்தேனோ என்பது குறித்துத் துருவி ஆராயப் புகுவீராக; அந்த ஆணையை மனமார ஏற்பேன். அவ்வாறின்றி, தக்க விசாரணை மேற்கொள்ளாமல் வெறும் ஐயத்தின் பேரில் என்னை நிந்தனைக்கு உள்ளாக்குதல் ஒவ்வாது. நல்லோரைத் தீயோரெனவோ, கயவ

ரைச் செவ்வியரெனவோ மனம் போனபோக்காக முடிவுகாண முனைவது நெறிமுறைக்கு முரணுகும். உள்ளார்ந்த அன்புடன் நேசிக்கும் ஒரு நண்பனை இழிவுபடுத்திப் புறக்கணிக்க முனைவ தைக் காட்டிலும் எல்லையற்ற பரிவுடன் ஒருவன் பேணிக்காக்கும் தன் உயிரையே பறிகொடுக்கத் துணிதல் மேன்மையாமன்றோ? உற்ற காலத்தில் உண்மையை உணர்வீர். மெய்ம்மை பொய்ம்மை களை ஐயமறப் புலப்படுத்துவது காலத்தின் கையிலிருக்கிறது. உண்மைக் கயவனைக் கண்டுபிடிக்க ஒரே நாள் சாலுமே.

பாணர்

முன்புதை மொழிகள் நன்பயன் நல்கும்
அவசரக் கூற்று ஐயந்தருமே.

எடிபஸ்

கள்ளச்சதிகாரன் கடுவிரைவாகத் தாண்டு நடைபோட்டுப் பதுங்கிப் பின்தொடருங்கால் மாற்றுச் சதியை நானுமே துரித மாகக் கையாளவேண்டு மன்றோ? அவன் தாக்கும் வரையில் காத்திருந்து வாளாயிருப்பேனுயின் வெற்றி அவனதேயாகும்; திண்ணம் அது; வீழ்ச்சி எனக்குத் தவருது.

க்ரியான்

உங்கள் முடிபுதான் என்னே! நாட்டிலிருந்துஎன்னை விரட்டும் நோக்கமா? நாடுகடத்துவதா?

எடிபஸ்

இல்லை. மரணதண்டனையேவா? பேராசைக்குக் கைம்மாறு என்னவென்பதை மக்கள் உணர்வதற்கு அதுவே தக்க தீர்ப்பு.

க்ரியான்

பிடித்த பிடியைக் கைவிடமாட்டீர் அல்லவா?

எடிபஸ்

அறிவிலியே உன்னை நம்புவான்.

க்ரியான்

பகுத்தறிவற்ற வரென்றே உம்மைக் கருதலாகுமே.

எடிபஸ்

என்னைப் பேணிக்கொள்ளும் பகுத்தறிவு என்பால் இல்லாம லில்லை.

க்ரியான்

எனது நலனையும் கருதுவீராக.

எடிபஸ்

வஞ்சகனுடைய நலனையா ?

க்ரியான்

மந்த மதியின் விளைவோ இம்மொழிகள் ?

எடிபஸ்

மனம்போல் கருதுவாய். கோலோச்சுவது மன்னர்களின் தனி உரிமை என்பதை மறவாதே.

க்ரியான்

அது கொடுங்கோலாயிருப்பின் ?

எடிபஸ்

என் தீபன் நாட்டு மக்களே, அவனது சுடுசொல் செவியில் விழுந்ததா ?

க்ரியான்

என்ன உரைத்தீர் ? உம்முடைய தீபன் மக்களா ? நானும் ஒரு தீபன் குடிமகனே.

பாணர்

மன்னர் மரபினர்களே, பேச்சை நிறுத்துவீர்களாக. ராணி ஜொகாஸ்டா இதோ அணுகுகின்றார்; மிகப் பொருத்தமான சமயம் இது. உங்கள் இருவர்களிடையே பாய்கின்ற பிணக்கைப் போக்கி ஒப்புரவை நிலைநாட்ட அன்னாரினும் அருகதை வாய்ந்தவர் யாரோ உளர் ?

(ஜொகாஸ்டா நுழைகின்றாள்)

ஜொகாஸ்டா

கொற்றவர் குலத்தினர்களே, முறைகெட்டு மோதுகின்றீர்கள். வாய்ச் சண்டையில் திளைப்பதேனோ? நாடெங்கும் வெந்துயரில் தத்தளிக்கும் இந்த இழிநிலையில் தன்னயம் சார்ந்த தீங்குகள் குறித்துச் சழக்குரையாடுதல் நாணக்கேடாகும். மன்றத்துக்குள் எழுவீர், எனது அருமை நாயகனே, இல்லம் விரைந்திடுவாய் சோதரனே. மீச்சிறு மனக்கோட்டத்தை ஊர் சிரிக்கப் பெருக்காதீர்கள்.

க்ரியான்

மன்னர்குல மங்கையே, என் அருமை சோதரி, உனது நாயகன், எடிபஸ், இரண்டிலொரு தண்டனையை அந்தோ, மொழிவற்கே பயங்கரமே!—கொள்ளைக்காரனைப் போல் நாடு கடத்தப் படுவதையோ, துரோகியை போல் கொலைக் குள்ளா வதையோ ஏற்குமாறு பணிந்துள்ளார்.

எடிபஸ்

ஆம், எனதன்பணங்கே, என்னுடைய அரச பதவியைப் பறிக்கச் சதி செய்யும் முனைவின்கண் சிக்கி விட்டான்.

க்ரியான்

அடாத இந்தக் குற்றச் சாட்டுக்கு எவ்வகையிலேனும் நான் உரியவனுயிருப்பின் செவ்விய வாழ்வை அறவே வெறுப்பேன், சாபக்கேடான சாவே எனக்குச் சால்பாகும்.

ஜோகாஸ்டா

தம்மை இறைஞ்சுகின்றேன் எடிபஸ் வேந்தே. சபதமிட்டு அவர் அறைந்த ஆணையைக் கருதியும், என் வேண்டுகோளுக் கிணங்கியும், உம் மூதாதையரின் மாண்பை மனத்தில் கொண் டும் அவர் மொழிந்ததை நம்புவீராக.

பாணர்

செவி சாய்ப்பீர் புரவலரே, ஆழ்ந்து சிந்திப்பீர், தன் மூப்பைத் தணிவு படுத்துவீராக.

எடிபஸ்

அவ்வாறெனில், எந்த வகையில் நான் இணங்கவேண்டும் என்கின்றீர்?

பாணர்

க்ரியான்தம் நேர்மையும் வாய்மையும் உலகறியும். அன்றி யுமே அவர் கூறியதனைத்தையும் கடவுள் மீது ஆணையிட்டு உறுதிபடுத்தியுள்ளாரே, உமது நன்மதிப்பை அவருக்கு வழங்கு வீராக.

எடிபஸ்

என்பால் நீர் அவாவும் தகவு எத்தகைத்து என்பதை உணர் கின்றீரா?

பாணர்

ஆம், நன்குணர்வேன்.

எடிபஸ்

அதை அறைவீர்; தம் கருத்தைத் தெற்றென விளக்குவீராக.

பாணர்

பிதற்றும் நாக்களின் புல்லிய மொழிகளைக்
கேட்டு நண்பனைக் கெட்டவ னென்னல்
அடியோடொவ்வா. அவனறை யாணையைப்
படியில் ஐயுறல் பாவமென்றுணர்வேன்.

எடிபஸ்

இத்தகைய வாக்குறுதியை என்பால் விழைவதில், மரணத் துக்கோ, நாடு கடத்தலுக்கோ என்னை உள்ளாக்கும் நோக்கமா?

பாணர்

ஆண்டவன் மீது நான் ஆணையிட்டறைகிறேன்,
அத்தகைத் தீய கருத்தென்னகத் திலதே,
எஞ்ஞான்று மிலதே. கனலிக் கடவுளே,
புல்லிய அந்நோக்கம் என்னில் புகுமாயின்
ஆண்டவனருளற்று ஆர்ந்த உறவினர்தம்
செவ்விய நட்பிழந்து சேர்வேன் இருளுலகம்.
மாண்புற்ற இந்நாட்டின் மாதுயரைக் கருதுங்கால்,
ஆறுத லென்பதையே காண்பது அரிதாமே.
இவ்விருவரிடைக் கிளர்ந்தெழும் உருமல்கள் பெருகு
மெனின்,
இந்நாட்டு இடும்பைகள் இருமடங்காய் ஓங்கிடுமே!

எடிபஸ்

சரி, அவன் இங்கிருந்து செல்லட்டும். எத்தகைய இடுக்கண் என்னைத் தாக்கினும், மாய்க்கப்படுவதையோ, நிந்தையுடன் நாட்டை விட்டு நீக்கப்படுவதையோ நான் பொருட்படுத்தேன்; உன் மொழிக்கு இணங்கித் தணிகின்றேனே யொழிய அவனைக் கருதியன்று. அவன் இங்குத் தங்கினும் சரி, எங்குச் சென்றாலும் சரி, அவன் மீது எனக்குள்ள அருவெறுப்பு மாறவே மாறாது.

க்ரியான்

தங்கள் சீற்றத்தில் எவ்வளவு அச்சுறுத்தலை வெளிப்படுத்தி னீரோ, தாங்கள் விட்டுக் கொடுப்பதிலும் வன்மத்தையே புலப் படுத்துகின்றீர். இத்தகைய மனப்போக்குடையவர்கள் தம்மைத் தாமே வெந்துயரில் வீழ்த்திக் கொள்பவராவர்.

எடிபஸ்

எனக்குச் சிறிது மனவமைதி வாய்ப்பதாக; முதற்கண் இங்கிருந்து போ.

க்ரியான்

என்மீது பொல்லாச் சாட்டுச் சாடுபவர் நீவீர் ஒருவரே; இங்குள்ளோர் யாவருமே என்னைப் பாராட்டத்தவருர்.

(க்ரியான் மறைகின்ருர்)

பாணர்

(ஜொகாஸ்டாவைப் பார்த்து)

மாதரசியே, தம் கொழுனனை மாளிகைக்குள் இட்டுச் செல் லுங்கள். இங்கு இனி தாமதம் ஏனோ?

ஜொகாஸ்டா

இந்தச் சழக்கு உருவாகியவகை யாதோ? முதற்கண் எனக்கு அதை விளக்குவீராக.

பாணர்

ஊர்பேச்சு நெறிகெட்ட ஐயங்களைக் கிளறின; இங்குக் காணும் கடுகடுப்பான கொந்தளிப்பு அதன் தீவினையே.

ஜொகாஸ்டா

பிழை இருவரையும் சார்ந்தது என்ற கருத்தா?

பாணர்

ஆம், இருவரையுமே.

ஜொகாஸ்டா

நீங்கள் கூறியது ஏதோ விடுகதையாய்த் தோன்றுகிறதே, சற்று விளக்குவீர்.

பாணர்

மேலும் விளக்க என்னை வற்புறுத்தாதீர் அம்மையே. நாடு வெந்துயரில் தோய்ந்துள்ளது. இந்நிலையில், தூங்கும் பிடாரி யைத் தட்டி எழுப்புவானேன்?

எடிபஸ்

விந்தையான அறிவுரை இது பாணரே, நல்லெண்ணத்துடன் தான் கூறுகின்றீர் என்பதில் ஐயமில்லை; ஆயினும் அது என் மனோவேகத்தைக் குறைத்து மழுங்கச் செய்வதாகும்.

பாணர்

மறுபடி மொழிவேன் கேட்பீர் மன்னரே,
நாட்டின் நலனை நடுக்கறத் தாங்கி
நிலை நிறுத்திய நுண் திறன் உமதே.
அத்தகைய அண்ணலை அசட்டை புரிவனேல்
என்னிலும் இழியோன் எங்குமேயிலனும்.
ஈண்டுத் துயருறும் இழிநிலை மக்களை
ஊக்கும் உத்தமர் உம்மினும் உளரோ ?

ஜொகாஸ்டா

தணிவற்ற சீற்றம் தம்மில் கிளர்ந்தெழுந்ததின் காரணம் யாதோ? கெஞ்சிக் கேட்கின்றேன், பகர்வீர் புரவலரே; நானும் அதை அறிய விழைகிறேன்.

எடிபஸ்

என்பால் உன்னிலும் பரிவுடையோர் யார் உளர்? சொல்லியே தீருவேன், அன்பணங்கே; க்ரியானும் அவனுடைய சதிகளுமே அதற்குக் காரணம்.

ஜொகாஸ்டா

இந்தச் சழக்கைத் தூண்டிய வகை என்னே? செவ்வனே விளக்குவீர்.

எடிபஸ்

லேயிஸை மாய்த்தவன் நான்தான் என்று அறுதியிட்டுச் சாடுகின்றான்.

ஜொகாஸ்டா

தன்னிறிவு கொண்டேயா, அன்றிப் பிறர் சொல் கேட்டா ?

எடிபஸ்

பிடி கொடுக்காமல் சுட்டற்றுப் பேசுவதில் வல்லமை வாய்ந்த வஞ்சகனும் ஒரு நிமித்தகன் வாயிலாக இக் குற்றத்தை வீசினான்.

ஜொகாஸ்டா

அவ்வாருயின் கவல் கொள்ளற்க; தம் அறனுணர்வில் அமைதி நிலவுக. என் மொழிகளுக்குச் செவி சாய்ப்பீர்; நிமித் தகக் கலையில் நிபுணனுய்த் திகழ்ந்த மாந்தன் ஒருவன் இருந் ததேயில்லை; இதை உறுதிப்படுத்தும் சான்றைத் தருகிறேன். லேயிஸ் மன்னனை அணுகி ஒரு நிமித்தகன் நெருங்கினுன்; (டெல்ஃபி தெய்வத்தின் ஆணைக்கிணங்கி எனக் கருதுவதற் கில்லை, அவர் தம் அடியார்களால் ஏவப்பட்ட ஒருவன் என லாகும்) மன்னன் தனது மைந்தன் கரங்கொண்டே மாய்வான் என அறைந்தான் அந்நிமித்தகன். அம்மைந்தன் என் கருவில் உதித்தவனே என்றும் உரைத்தான். லேயிஸ் மன்னனே, முப்பாதைகள் ஒருங்கு கூடுமிடத்தில் வழிப்பறிக்காரர்களால் கொலையுண்டார். இந்நாட்டு மக்களால் அன்று, நான் ஈன்ற செல்வனை, அது பிறந்த மூன்றும் தினத்திலேயே அதன் கணுக்கால்களைத் துளைத்து இரண்டையும் இறுகப் பிணைத்து இம்மியும் சுவடற்ற மலை நெருக்கத்தில் களைந்தெறியுமாறு பணியாட்களுக்கு லேயிஸ் கட்டளை யிட்டார். எனவே பிறந்த குழந்தையே தந்தையின் கொலைபாதகனுவான் என அப்போலோ தெய்வம் அறைந்த திருவாக்கு விழலாயிற் றெனலாமே. தனது புதல்வன் கையால் லேயிஸ் கொலையுண்டான் என்ற வீண் அச்சம் மறைந்ததன்ருே? வருவது பற்றி இவ்வாறு உரைக்கத் துணிந்த நிமித்தகன் கூற்றுக்கு மதிப்பேது? ஆகவே, வேந்தனே, கவலையை நீக்குவீராக; கடவுள் தேர்ந்தறிய விரும்புவதைப் பிறருதவியின்றித் தக்க நேரத்தில் தானே நேராகப் புலப்படுத்துவது திண்ணம்.

எடிபஸ்

மங்கையே, உன் மொழிகளைக் கேட்குங்கால் எத்தகைய சுடு நினைவுகள் அலைமோதுகின்றன; உள்ளக்கிளர்ச்சிகள் என்னில் பொங்கி எழுகின்றனவே.

ஜொகாஸ்டா

தங்கள் மனத்தைத் தாக்கித் திடுக்கிடச் செய்தது என்னே? விளங்கவில்லையே!

எடிபஸ்

முப்பாதைகள் மயங்குமிடத்தில் மன்னன் லேயிஸ் மாய்க்கப் பட்டான் என்ரு உரைத்தாய்! என் செவியில் ஒலித்தது சரிதாஞ?

ஜொகாஸ்டா

அவ்வாறுதான் சொல்லிக் கொண்டார்கள்; அது பற்றிய ஊர்பேச்சு இன்னமும் மறைந்தபாடில்லை.

எடிபஸ்

அந்தக் கொலை எவ்விடத்தில் நிகழ்ந்ததாம்? அந்தவிடத்தை நீ அறிவையா?

ஜொகாஸ்டா

அந்தப் பிரதேசத்துக்கு ஃபோஸிஸ் என்ற பெயராம்; டெல்ஃபியிலிருந்தும் டௌலிஸிலிருந்தும் வருகிற பாதைகள் அங்குச் சந்திக்கின்றனவாம்.

எடிபஸ்

எத்தனை ஆண்டுகளுக்கு முன் இந் நிகழ்ச்சி நேரிட்டது?

ஜொகாஸ்டா

இந்நாட்டு நாயகராய்த் தாங்கள் முடிசூட்டப்படுவதற்கு ஒரு சிறிது காலம் முன்புதான் அதுபற்றிய செய்தி வெளிவந்தது.

எடிபஸ்

அந்தோ! 'ஜுஊஸ்' கடவுளே, என்னை என்ன பாடு படுத்தக் கருதியுள்ளாயோ!

ஜொகாஸ்டா

எடிபஸ் வேந்தரே, தங்களை அல்லலுறுத்துவது யாதோ?

எடிபஸ்

மேலும் வினவவேண்டாம், நான் தக்க விடைகூறும் நிலையிலில்லை. நிற்க, லேயிஸ்ஸின் உடலமைப்பு எத்தகைத்து, அவருடைய உயரம் என்ன, அச்சமயம் அவர்தம் வயதென்ன, வாலிபப்பருவந்தானோ? யாவும் பகர்வாய்.

ஜொகாஸ்டா

கம்பீரமான உயரம்; தலை மயிரில் சிறிதளவு நரை படர்ந்திருந்தது, உருவம் ஏறக்குறைய உமக்கு ஒப்பாகும்.

எடிபஸ்

அந்தோ! என் துர்க்கதி! என்னையும் அறியாமல் கடுஞ் சாபத்திற்கு என்னை ஆளாக்கிக் கொண்டேன் போலும்!

ஜொகாஸ்டா

தம் அலர்மொழிகள் விளங்கவில்லையே. எனது அருமை நாயகனே, தங்களைப் பார்க்குங்கால் நடுக்கம் மேலிடுகின்றதே !

எடிபஸ்

அச்சுறுத்தும் அனுமானம் என்னில் பிறக்கின்றது. அந்த நிமித்தகன் அந்தகனே யெனினும் அவன் மொழிந்தது மெய்ப் படும் போல் காண்கிறதே! எனது ஐயம் தீரும் வகையில் மேலும் ஒரு கேள்வி கேட்கின்றேன்.

ஜொகாஸ்டா

என் மெய் சிலிர்த்துக் கலக்கம் மேலிடுகிறது. எனினும் கேட்க விரும்புவதைக் கேளுங்கள், அனைத்திற்கும் விடை தருவேன்.

எடிபஸ்

லேயிஸ்ஸின் பிரயாணத்தின்கண் ஒரு சிறிய சேனையுடன் சென்றாரா, அன்றி ஆயுதம் தாங்கிய படை பலத்துடனா ?

ஜொகாஸ்டா

அவருடன் புறப்பட்டவர்கள் மொத்தமே ஐந்து பேர்கள் தாம். அவர்களில் முன்னோடியாம் தூதுவன் ஒருவன். லேயிஸ்ஸை கோவேறு கழுதை பூட்டிய ஒரு சகடம் ஏந்திச் சென்றது.

எடிபஸ்

அந்தோ !, அந்தோ! அனைத்தும் இப்போது மிகத் தெள்ளிதின் புலனாகின்றது. இச்செய்திகளையெல்லாம் உன்னிடம் தாங்கி வந்தவன் யாரோ? பகர்வாய் பாவையே.

ஜொகாஸ்டா

ஒரு பணியாள்—அவருடன் சென்றவர்களில் தப்பித்து வீடு திரும்பியவன்.

எடிபஸ்

ஒருகால் அண்மையில் அவன் சிக்கக்கூடுமோ? இல்லத்தில் இன்னமும் அவன் தொண்டாற்றி வருகின்றானோ ?

ஜோகாஸ்டா

இல்லவேயில்லை. நிகழ்ச்சி நடந்த விடத்திலிருந்து அவன் இங்கு ஏகியபோது வேந்தனது பீடத்தில் மன்னன் லேயிஸுக்கு மாறாக நீங்கள் அமர்ந்திருப்பதைப் பார்த்ததுமே மனமடிந்தான் போலும். புள்ளீட்டம் மேய்வதற்குரிய புற்றரை பூமிக்குத் தன்னை அனுப்பிவிடுமாறு என்கரத்தை இறுகப்பற்றிக் கெஞ்சிக் கேட்டான். இந்நகரிலிருந்து கண்காணாத தொலை தூரத்தில் வாழ்வதையே அவன் விழைந்தான்; அவன் வேண்டுகோளை ஏற்றேன். தொண்டடிமை என்றாலும் நேர்மை வாய்ந்தவன். அவன்பால் நான் காட்டிய பரிவைவிடச் சிறந்த ஒரு நன்கொடைக்கு உரியவன்.

எடிபஸ்

காலத்தாழ்வின்றி அவனை இங்குத் தருவிப்பதை விழைகின்றேன்.

ஜோகாஸ்டா

அது எளிதே. ஆயின் இக் கட்டளையின் கருத்தென்ன?

எடிபஸ்

முன்யோசனையின்றி ஏதோதோ பிதற்றி விட்டேன். எனவே, அவனைக் காண்பதில் திருப்தியுண்டாகும்.

ஜோகாஸ்டா

அவனை எளிதில் வரவழைக்கலாகும்; அது நிற்க, எனது நாயகனே, தங்கள் உள்ளத்திலே குமுறும் கொந்தளிப்பில் பங்கு கொள்ளும் உரிமை எனக்கும் உளதன்றோ?

எடிபஸ்

வருவது பற்றிய என்னுடைய ஊகங்கள் தொலை தூரம் தாவிக்கொண்டிருக்கும் இந்நிலையில் உனது அன்பார்ந்த ஆர்வத்தைப் புறக்கணியேன்; அச்சுறுத்தும் துணிகரச் செயல்களில் சிக்கியுள்ள என்னுடைய விருத்தாந்தத்தை வினவுவதற்கு உன்னிலும் உரியவர் வேறுளரோ! கூர்ந்து கேட்பாய்! காரிந்த் நாட்டு மன்னன் பாலிபஸ் எனது தந்தையாவன், என்னை ஈன்ற தாயின் பெயர் மெரோபே, டோரியன் பிரதேசத்தைச் சார்ந்தவள். அந்நாட்டினர் அனைவரும் மக்களில் மாணிக்கம் என என்னைப் பாராட்டி வந்தனர். ஆயின் ஒருநாள் திடுமென ஏற்

பட்ட ஒரு விந்தையான நிகழ்ச்சி; விந்தையே யெனினும் அதனுல் என்னில் அப்போது கிளர்ந்த அத்துணை மனவெழுச்சிக்கு இடமில்லை யென்றே இயம்பலாம். பெருவிருந்தொன்று நடைபெற்றுக் கொண்டிருக்கும் தருவாயில், நறவுமாந்தி நிலை தப்பிய வீம்பனெருவன் மதுக்கிண்ணத்தைக் கையிலேந்தியவனுய் என் முன் வந்து 'உன் தந்தையின் உண்மையான புதல்வன் அல்லன் நீ' என்று பிதற்றினன். துணுக்குற்று ஒரு கணம் மனம் நொந்தேன்; ஆயின் அந்தச் சந்தர்ப்பத்தை யொட்டி அந்த இழி பழிப்பைப் பொருட்படுத்தாது வாளாவிருந்தேன். மறுநாள் என் தந்தை தாய்களை அணுகி இதுபற்றி விளக்கம் கேட்டேன். என் பெற்ரேரைச் சார்ந்து அக்கயவன் அறைந்த அலர் மொழிகளின் மீது வெஞ்சினம் கொண்டனர்; இயன்ற வரை எனக்கு ஆறுதலளிக்க முயன்றனர். எனினுமே, அந்த நச்சு முட்கள் என் உள்ளக் கொதிப்பைக் கிண்டிக் கொண்டிருந்தன. அன்றியுமே அந்த அவதூறு மொழிகள் ஊரெங்கும் பரவிப் பெருகிக் கொண்டே யிருந்தன. தாய் தந்தையரின் அனுமதி பெருமலும் பிறரறியா வண்ணமும் இல்லம் நீங்கி டெல்ஃபி தேவாலயத்தை நாடி ஓடினேன். அங்குக் கோயில் கொண்ட அப்போலோ தெய்வமோ சுட்டாக நான் கோரியதற்கு விடை தராமல், இடுக்கண்கள், புலம்பல்கள், வாதைகள் ஈனச் செயல்கள் ஆகியவை போன்ற வெந்துயர்களுக்கு நான் இரையாகப் போவதாகக் குறி கூறியது. அத்துடன் நிற்கவில்லை. எனது அன்னையின் மணவறையை மாசுபடுத்தி மக்களுடைய அருவருப்புக்குப் பாத்திரமாகும் குழவிகளுக்குத் தந்தையாவேனும். அந்தத் தெய்வ வாக்கின் இறுதி இடிப்பு—என்னை ஈன்ற தந்தையையே என் கரத்தால் கொல்வேனும். இந்தப் பயங்கர மொழிகள் செவியில் தாக்கியதுமே அந்த எல்லையை விட்டு ஓடோடிப் போனேன். நான் வளர்ந்த கோரிந்த் நாட்டை அறவே மறந்தேன்; வானில் மேயும் தாரைகளைக் கொண்டு அந்நாட்டின் இருப்பிடத்தை ஓரளவு இப்போது அறியலாகின்றேனே தவிரப் பிறிதில்லை. எந்தத் திக்கில் பாய்ந்தேனே ஓர்ந்தேனில்லை; எனது ஒரே நோக்கம் அவ்வாக்கு அறைந்த அவர் மொழிகள் நிறைவேரு வண்ணம் தப்பித்தோடுவதேயாகும் எனத் துணிந்தேன். சுற்றி அலைந்து நான் திரியுங்கால், லேயிஸ் மன்னன் கொலையுண்டவிடம் என்று சொல்லிக் கொள்கின்ருர்களே அங்குச் சேர்ந்தேன். பிறகு நடந்ததை நடந்தவாறுரைப்பேன், கேட்பாய் மங்கையே. முப்பிரிவாய் விரியும்

அந்தப் பாதையின்கண் அணுகியதுமே முன்னோடியாகப் பணியாற்றிய தூதுவனொருவனைச் சந்தித்தேன். நீ கூறிய விருத்தாந்திற்கேற்ப கோவேறு கழுதைகள் பூட்டிய சகடமொன்றின் முன்புறம் வீற்றிருந்த சாரதியும் அவனுக்குப் பின்னால் அமர்ந்திருந்த முதியோரும் பாதையை விட்டு என்னை ஒதுக்கித் தள்ளுவதாக முரட்டுத்தனமாய் அச்சுறுத்தினர். அச்சுறுத்தியதோடு மட்டுமன்றி அந்தச் சகடப்பாகன் முழங்கையால் என்னை முட்டித்தள்ள முனைந்தான். கடுஞ்சினங் கொண்டவனாய் அவனைத் தாக்கினேன். இதைக் கவனித்துக் கொண்டிருந்த அந்தக் கிழவர் வண்டியின் பக்கப்புறமாக நான் நகருங்கால் இருமுனைக் குதிமுள்கொண்டு முழுவேகத்துடன் என் தலையைத் தாக்கினார். பழிக்குப்பழி தீர்ப்பதில் நான் இளைத்தவனல்லனே; உரம்வாய்ந்த என் கைத்தடி கொண்டு அவரைத் தரையில் இழுத்துத் தள்ளிக் கொலை செய்தேன்; அவருடன் வந்த ஒவ்வொருவனையும் அதுவேபோல் வீழ்த்தித்தள்ளி மாய்த்தேன். நான் உயிர்குடித்த முன்பின் அறியாத அந்த முதியோர்தாம் லேயிஸ்ஸாய் இருக்கக் கூடுமாயின் உன்முன் காட்சியளிக்கும் என்னைக் காட்டிலும் கயவனொருவனைக் காண்பதரிது. இறைவனின் இடுதண்டத்திற்கு என்னினும் உரியவன் இருத்தல் இயலுமோ? எந்தவொரு வேற்றாளோ, விதேசியோ, குடிமகனோ என்னை விளிக்கவோ, எனக்குத் தஞ்சம் தரவோ அனுமதியளிக்க மாட்டானே. யாவருமே தம் இல்லங்களை அணுகவொட்டாமல் என்னைத் துரத்துவரே. இக்கடுஞ் சாபங்களை என்மீது நானே சாற்றிக்கொண்டேனவன். இழிவிலும் இழிவு, என் கரம் கொண்டு மாய்ந்தவனின் மனைவிக்கு மானபங்கம் இழைத்தேனையின் நீசனில் நீசன் யானே யன்றோ? மாசின் முகட்டை எட்டியவனவன். நாடு கடத்தப்படுவேன். உற்றார் உறவினர்களைக் காணவுமியலாது. நான் உதித்த ஊரில் அடிவைக்கலாகுமோ? என் அன்னையின் மணவறையைக் கறைப்படுத்துவதா? ஈன்றெடுத்துப் பரிவுடன் ஊட்டி வளர்த்த என் தந்தையாம் போலிபஸ் புரவலனைக் கொலை புரிவதா? இவை நிகழுமாயின் இரக்கமற்ற இழிவாற்றலொன்றின் தீவினைப்பயனே எனக் கருதுவதைத் தவிர வேறில்லை. தூய்மையும் திகைப்பும் மண்டிய தெய்வங்களே! இவையொன்றும் நேராவண்ணம் காப்பீராக. காப்பில்லையெனின் அந்தத் தொத்து நோய் என்னைத் தாக்குதற்கு முன்பே மாந்தர் இனத்திலிருந்து அறவே மறைவதை விழைகின்றேன்.

பாணர்

தாங்கள் துய்க்கும் வெந்துயர் எங்களுடைய உள்ளத்தையும் வாட்டுகின்றது. எனினுமே, அக்கொலைக்களத்தில் உயிர்தப்பி மீண்டவனைத் தாங்கள் நேரில் உசாவி உண்மையை உணரும் வரையில் நல்வினையில் நம்பிக்கை இழக்காமலிருப்போமாக.

எடிபஸ்

அத்தகைய நம்பிக்கை என்பால் பெரும்பாலும் சிதைவுற்றதே எனினும் மந்தை மேய்க்கும் அந்த ஆள் வருந்தனையும் ஆசையை ஓரளவு கைவிடாமலிருப்பேனாக.

ஜொகாஸ்டா

அந்த ஆள் இங்கு வந்தானென்று வைத்துக்கொள்வோம். அவனிடமிருந்து தாங்கள் அறியப்புகுவது என்னே?

எடிபஸ்

நான் கூறுவது கேட்பாய் காரிகையே, நீ மொழிந்ததும் அவன் மொழிவதும் ஒன்றுக்கொன்று முரணின்றிப் பொருந்துமாயின், பெரிய விபத்திலிருந்து தப்பியவனாவேன்.

ஜொகாஸ்டா

சுட்டாகக் குறிப்பிடும் வகையில் நான் என்ன கூறிவிட்டேன்?

எடிபஸ்

கள்வர்களால் லேயிஸ் கொல்லப்பட்டார் என்று அந்த இடையன் இயம்பியதாகச் சொன்னாய். ஒரே ஒரு கள்வன் கையினால் என்று கூறாததால் அந்தக் கொலைப்பழி என்னைச் சாராதன்றோ? ஒருமையோடு பன்மை ஒவ்வாதன்றோ? வழிப்போக்கன் ஒருவன் மாய்த்தான் என்று உரைப்பானாயின், பழிப்பிலிருந்து என்னைத் தப்பவைக்கும் இறுதிப் பிணைப்பும் முறிந்ததாகும்.

ஜொகாஸ்டா

உறுதியாய் உரைக்கின்றேன், கேட்பீர். முதற்கண் அவன் அறைந்தது அவ்வாறே. இப்போது அவன் அதை மாற்ற முற்படல் முரணாகும். அவன் கூறியது நான் மட்டுமன்று, நகர மாந்தர் அனைவர் காதிலும் அவ்வாறே விழுந்தது. பிறகு

ஒருகால் அவன் அதற்குப் பிணக்காய் மொழிந்தாலுமே கூட நிமித்தகன் கூற்றுக்களோடு, லேயிஸ் கொலையைச் சார்ந்து அளவிலாவது, அது பொருந்தவே பொருந்தாது. அப்போலோ தெய்வம் தெட்டத்தெளிவாக நான் ஈன்ற குழந்தையின் கையால் மாய்க்கப்படுவது திண்ணம் என்றல்லவோ அறிவித்தது? அந்தோ! மாசுமறுவற்ற அந்த என் செல்வச் சேய்தான் முதற் கண் உயிர்நீத்ததே. இனி இந்தக்குறி கூறுவோரை சரியோ, தப்போ, ஏறிட்டும் பார்க்கமாட்டேன்.

எடிபஸ்

உன் பகுத்தறிவைப் பாராட்டுகின்றேன். எனினும் அந்த அடிமைத் தொண்டனுக்கு அழைப்பிட்டு இங்கு ஏகுமாறு செய் வாய்; அதுபற்றி விரைந்து முனைவாயாக.

ஜொகாஸ்டா

இக்கணமே அக்காரியத்தைக் கவனிப்பேன். இல்லத்துள் ஏகுவோம் வாரீர். என் நாயகன் விரும்புவதை ஈடேற்றுவ தொன்றே என் கடமையாகும்.

(எடிபஸம் ஜொகாஸ்டாவும் உள்ளே போகின் றுர்கள்)

பாணர்

இறைவன் இனிதே வகுத்த செந்நெறி
மண்ணில் மடிந்து மறைந்து விடுமோ?
உளம்உரை உயர்செயல் இவைதம் தூய்மை
பேணியேபெறும் புகழ்போற்ற விழைவன்
அறநெறிமடியில் அமர்ந்தே உறையும்
பெம்மான் பெருந்திறன் பொலியக் காண்பீர்
அவர்தனை அடையுமோ மூப்புந்தானே.
அகந்தையில் எழுவன் அரக்கர் வேந்தன்
செல்வச் செருக்கால் சேணில் மிளிர்பெருமை
வில்லையில் உதிர்ந்திடும் உண்ணரு விதியால்
ஆழ்வன் அழிவன் உறவினர் இன்றியே
நாட்டின் நன்மை நாடும் பெருநலம்
செருக்கெனக் கொள்ளத் தகுமோ செப்புவீர்
அதனைக் குலைப்பது அறமோ அறைவீர்
காக்கும் கடவுளை நாடுவன் நானே.

அறந்தனை அஞ்சி ஒழுகா வஞ்சகன்,
செயலிலும் சொல்லிலும் செருக்குற்ற வெய்யன்
தெய்வவடிவம் இகழ்ந்தே திரிவோன்
வேரொடு மாய்வன் விதியாம் புயலில்
தீச்செயல் திளைக்கும் கயவன் தப்பான்
கொதித்தெழும் கொடிய தெய்வக் கணைதனை
அறம்போய் மறம்புகும் அவனியை அணுகேன்
தெய்வத் திருச்சபை நாடேன் நானே.
அப்பலோ கோயிற் பூசைஆற்ருர்
விதியையும் வெறுப்பர் வையகமாந்தர்
ஆண்டவன் அறக்குறல் அவிந்து பொய்ப்பின்
அமரர்கோவே அறிவாய் நீயே.

(ஜொகஸ்டா நுழைகிருள்)

ஜொகஸ்டா

சான்ருேர்களே, நறுமணம் செறிந்த மாலைகளையும் புனித நன்கொடைகளையும் உங்கள் அரசி ஏந்திவருவதைக் கண்டு வியப்புறுகின்றீர் போலும்! வேந்தர் எடிபஸ் பலவகைப் பனிப் புக்களால் நிலைகுலைந்து அலர்கின்ருர். புதிதாய்த் தலைகாட்டும் பருவரல்களுக்குப் பரிகாரம் காண்பதில் அவரில் அமைந்த பண்டைய பகுத்தறிவைப் புறக்கணிக்கின்ருர். வீம்பனொருவன் தீங்கொன்றை எச்சரிப்பானுயின் அதையும் நம்பி வீணே விழு மத்தில் அலமருகின்ருர். என்னுடைய அறிவுரைகள் அவர் செவியில் ஏறவில்லை. எனவே, லீசியாவில் கோயில் கொண்ட அப்போலோ பெம்மானே, உனதருளை வேண்டிப் பிராத்தனைகள் ஆற்றுகின்றேன். எங்கள் துயரைத் துடைத்து அமைதி அளிக்கு மாறு இறைஞ்சிக் கேட்கின்றேன். வெம்புயலில் சிக்கி வாய டைத்து நிற்கும் சுக்காணியை நோக்கி மாலுமிகள் மயக்குறு வதை ஒக்கும் எங்கள் நிலை.

(கொரிந்திய நாட்டுத் தூதுவன் நுழைகின்ருன்)

தூதுவன்

பெருமக்களே, எடிபஸ் வேந்தன் வதியும் மாளிகை எங்குளது, அறிவிப்பீர்? அவரை எங்குக் காணலாம் என்பதைத் தெரிவிப்பீர்களாயின் மேலும் உகந்ததாகும்.

பாணர்

அவர்தம் அரண்மனை இதுவே ; உள்ளேதான் இருக்கின்ருர். அவருடைய பிள்ளைகளைப் பெற்றெடுத்த தாயையும் இதோ ஈண்டு காண்கின்றீர்.

தூதுவன்

விண்ணேர் அருளால் இவருக்கு வாய்க்கப் பெற்ற இம் மகாராணியார், பெருமிதம் பெருகும் இவ்வில்லதில் இடையருது இன்புற்று வாழ்வாராக.

ஜொகாஸ்டா

புதிதாய்க் காட்சியளிக்கும் பெரியோரே, எனது நல்வாழ்த் தும் உமக்கு உரித்தாகும். செப்புவீர், எதை நாடி இங்கு ஏகி யுள்ளீர்? செய்தி ஏதேனும் தாங்கி வந்திருக்கின்றீரா ?

தூதுவன்

சுபச் செய்திகள் அம்மையே, தங்களையும் தங்கள் மணுளனை யும் சார்ந்தவை.

ஜொகாஸ்டா

அச்செய்திகள் யாவோ, உரைப்பீர், தங்களை இட்டு அனுப் பியது யாரோ ?

தூதுவன்

காரிந்த் நகரிலிருந்து ஏகியவன் நான், நான் தாங்கிவந்த செய்தியைச் சாற்றுங்கால் களிப்புறுவீர், திண்ணமது ; ஆயின், மகிழ்ச்சியுடன் மனக்கோட்டமும் இடம் பெறலாகும்.

ஜொகாஸ்டா

இருவகை உணர்ச்சியைக் கிளரும் அச்செய்திதான் என்னே ?

தூதுவன்

இஸ்த்மியன் நாட்டுக்கு மன்னராய் முடிசூட்டப் பெறுவார் எடிபஸ் என்பது ஊர் வதந்தி.

ஜொகாஸ்டா

அப்படியென்ருல், புரவலன் பெலிபஸ் ஆட்சி சாய்ந்த தென்ற கருத்தா ?

தூதுவன்

கருத்து அவ்வாறில்லை; உயிர்நீங்கிக் கல்லறையில் புகலானூர்.

ஜொகாஸ்டா

என்ன இயம்புகின்றாய்? முதியோர் பேலிபஸ் மாண்டனரா?

தூதுவன்

உண்மை உரைத்தேன்; பிணக்கிருப்பின் மாய்வதில் மகிழ்ச்சி யுறுவேன்.

ஜொகாஸ்டா

பணிப்பெண்ணே, விரைந்தோடி இச்செய்தியைத் தலைவருக்குத் தெரிவிப்பாய், கடவுளர் தம் ஆணையை அறைவதாக ஒலித்தீரே நிமித்தகர்காள், உங்கள்வாக்கு என்னுவது? எடிபஸ் கரம் கொண்டு பாலிபஸ் மாய்க்கப்படுவார் என்றெல்லாம் பிதற்றியது பற்றியே அச்சுற்று அவர்பால் அணுகுவதை எடிபஸ் அறவே புறக்கணித்தார். இப்போது அறிவதென்ன? விதியின் வினையால் பாலிபஸ் மாண்டாரேயன்றி எடிபஸ் கரம் கொண்டல்லவே.

(அரண்மனைக்குள்ளிருந்து எடிபஸ் வெளிவருகின்றூர்)

எடிபஸ்

ஜொகாஸ்டா கண்மணியே, விரைந்து வெளிவருமாறு எனக்கு அழைப்பிட்டது ஏனோ?

ஜொகாஸ்டா

இதோ வந்திருக்கின்றூரே, அவர் கூறுவதையெல்லாம் உற்றுக் கேட்ட பிறகு தக்க முடிவுக்கு வருவீராக; பீடைபிடித்த அந்த நிமித்தகர்களின் பொய்மொழிகள் தெற்றெனப் புலனுகும்.

எடிபஸ்

இவரா! யாராயிருத்தல்கூடும்? என்பொருட்டு என்ன செய்தி தாங்கி வந்திருக்கின்றூர்?

ஜொகாஸ்டா

அவர் காரிந்த் நாட்டு குடிமகன், தங்கள் தந்தை பாலிப்ஸ் காலமானதைத் தெரிவிக்க வந்துள்ளார்.

எடிபஸ்

எப்படி, என்ன? தங்களை முன்பின் அறியேனே, தாம் தாங்கிவந்த செய்தியை உமது வாய் கொண்டுரைப்பதைக் கேட்க விழைகிறேன்.

தூதுவன்

முதற்கண், ஐயமறத் தெளிவாக நான் கூறுவது தங்கள் தந்தை மடிந்தார், உலகைவிட்டு அறவே மறைந்தார்.

எடிபஸ்

வஞ்சகத்தின் விளைவா, அன்றிப் பிணியால் பீடிக்கப்பட்டா?

தூதுவன்

நீண்ட நெடுவாழ்வு வாழ்ந்து இயற்கை எய்தினார்.

எடிபஸ்

நம் கவலை கரைந்தது காரிகையே. என் கரம் கொண்டு என் தந்தை கொலையுண்டார் என வீணே பிதற்றிய பிதியன் நாட்டு நிமித்தகர்களையோ, தீய அறிகுறி அலர்த்தும் புள்ளினத்தின் புலம்பல்களையோ பொருட்படுத்துவானேன்? அவரோ சவக் குழியில் சாய்ந்தார். நானோ, என் கரத்தில் வாள் ஒன்று ஏந்தியதேயில்லை. பல்லாண்டுகள் என்னைக் கண்ணில் காணாத ஏக்கத்தினால் உயிர்துறந்திருத்தல் கூடும். அந்தக் கருத்தில் அவர் மரணத்துக்கு நான் காரணம் என்று கொள்ளலாமே யொழிய பிறிதில்லை. அந்த நிமித்தக ஒலிகளோ, மண்ணோடு மண்ணாய்ச் சாம்பலோடு சாம்பலாய்ப் பாலிபஸ் மாய்ந்தது போலவே அறவே மறைந்தன.

ஜொகாஸ்டா

இப்படித்தான் முடிவுறுமென முன்பே நான் மொழியவில்லையா?

எடிபஸ்

உண்மை, நீ அப்படித்தான் உரைத்தாய். ஆயின் அச்சம் என்னை அலையச் செய்தது.

ஜொகாஸ்டா

அச்சத்திற்கு இனி இடமிலதன்றோ? அமைதியுறுவீர்.

எடிபஸ்

அது நிற்க, எனது அன்னையின் மணவறையை மாசு படுத்தியதாக அறைந்தார்களே; அந்தப் பழிப்பு என் உள்ளத்தை இன்னமும் உறுத்துகின்றது.

ஜொகாஸ்டா

மனிதப் பிறப்பென்பது தற்செயலின் தாலாட்டுப் பொம்மை. வருவதை ஐயமற உணரும் ஆற்றல் மாந்தர்பால் அமைந்திருக்க வில்லை. அந்நிலையில் அவன் வீணே வருந்துவதேனோ? கையில் கிடைத்ததை மாந்திக் கவலையற்றிருப்பதே உத்தமமாகும். தாயின் சேக்கையைக் கறைபடுத்தியதாகக் கூறிய அவர் மொழிக்கு அஞ்சற்க. அன்னையை மணந்து இன்புற்றதாகக் கனவு கண்டவர்களும் உண்டு. ஆயின் அது கனவேயன்றோ? மூளைக்கோளாறின் மதிமயக்கங்களைப் புறக்கணிப்பதிலே அமை வுற்ற வாழ்க்கைக்கு ஆக்கந்தருவதாகும்.

எடிபஸ்

என் அன்னையின் ஆயுள் அணைந்திருப்பின் உன்மொழி களில் முழு ஆறுதல் பெற்றிருப்பேன். உன் அறிவுரை ஓரளவு உறுதிப்பாடளிக்கின்றதெனினும் அவர் வாழுந்தனையும் என் அச்சம் அகலாது.

ஜொகாஸ்டா

எனினும், உம் தந்தை இறந்துபோன செய்தி நம் பருவரலைப் பேரளவு போக்குகிறதன்றோ?

எடிபஸ்

உண்மையே, எனினும் என்னில் எஞ்சி நிற்கும் எவ்வம் இன்னம் உயிர்வாழும் அவள் பொருட்டேயாம்.

தூதுவன்

அவள் என்று குறிப்பிட்டீர்களே அந்த அம்மை யாரோ?

எடிபஸ்,

மன்னன் பாலிபஸின் மனைவியாம் மெரோபே மாதைச் சுட்டினேன் தூதுவரே.

தூதுவன்

அந்த அம்மையைச் சார்ந்து உம்மில் எழும் கலக்கத்திற்குக் காரணம் யாதோ?

எடிபஸ்

கடுந்திகிலைக் கிளரும் கருத்தடங்கிய வானோர் வாக்கே, முதியோரே.

தூதுவன்

அவ்வாக்கு மர்மம் மலிந்ததோ? என்போன்ற அயலான் காதில் அது விழக்கூடுமோ?

எடிபஸ்

தாங்கள் அறிவதில் தவறொன்றுமில்லை. என்னை ஈன்ற அன்னையோடு எனக்குப் புணர்ச்சி ஏற்படுமென்றும், என் தந்தையின் தலையை எனது கரம் கொண்டே சீவி விடுவே னென்றும் லோக்ஸியஸ் தெய்வம் ஒரு சமயம் சாடியது. அக்கணமே காரிந்த் நாட்டை விட்டகன்று ஓட்டம் பிடித்தேன். அந்தோ! என் பெற்றோர்களின் இன்முகத்தைப் பல்லாண்டு களாக இழந்து வெளி சஞ்சாரத்தில் முனைந்தேனே!

தூதுவன்

வீடு திரும்புவதற்கு நீங்கள் அஞ்சுவது இவ்விரு கார காரணங்களைச் சார்ந்தேவா?

எடிபஸ்

ஆம், என்னைச் சார்ந்து வெளியிட்ட தெய்வவாக்கு நிறை வேறாமல் தடுப்பதற் பொருட்டே.

தூதுவன்

பெற்றோர்களுக்குத் தீங்கிழைக்கும் பழிச் சொல்லுக்கு ஆளாகாமல் இருப்பதற்கு அல்லவா?

எடிபஸ்

முற்றிலும் உண்மை முதியோனே, அந்த அச்சமே என்னை ஓயாமல் வாட்டி வருகிறது.

தூதுவன்

தம் அச்சம் விழலேயாம், அதற்கு இம்மியும் இடமில்லை என்பதை உணர்வீரா?

எடிபஸ்

அஃதெவ்வாறு இயலும்? அவ்விருவருக்கும் பிறந்த பிள்ளை யல்லவோ நான்?

தூதுவன்

இல்லவேயில்லை. உமக்கும் பாலிபஸுக்கும் குருதிக் கலப்பு அறவே இலது.

எடிபஸ்

என்ன இயம்பினாய்? பாலிபஸ் என் தந்தையல்லவா?

தூதுவன்

உம்மோடு உரையாடும் நான் எப்படி தந்தையல்லனோ அவரும் அவ்வாறே. அறவே இல்லம் நீங்கி ஏகியதற்கு அவ்வச்சம்தான் காரணமோ?

எடிபஸ்

ஆம், அதுவேதான். என் தந்தையை நானே மாய்க்கும் நிலைமை ஏற்படுமோ என்ற பயம் ஓங்கியது.

தூதுவன்

வேந்தே, உமக்குக் களிப்பூட்டும் பொருட்டே இங்கு நான் ஏகியுள்ளேன். தாங்கள் வெளியிட்ட இவ்விரண்டாவது கலக்கத்தையும் களைத்தெறிந்தேனன்றோ?

எடிபஸ்

உண்மையே. அதற்குற்ற வெகுமதியைப் பெற்றே தீருவாய்.

தூதுவன்

தாங்கள் இல்லம் மீளுவதால் எனக்கு நற்பயன் விளையும் என்ற நம்பிக்கையால் தூண்டப்பெற்றே ஈண்டுவரத் துணிந்தேன், உண்மை அதுவே.

எடிபஸ்

என் பெற்றோர் மனையை அணுகவே அணுகேன்.

தூதுவன்

என் அன்புக்குகந்த மகனேபோல் உங்களைக் கருதி இதை உரைக்கின்றேன்; தங்கள் தீர்மானத்தின் பிழையை உணர்கின்றீரில்லை.

எடிபஸ்

அவ்வறிவுரையின் கருத்தென்ன? என் பிழையைத் தெள்ளிதின் விளக்கிக் காட்டுவாய். எவ்வகை உறவும் இல்லாத உன்னையும் என்னுடைய தகப்பனையும் ஒருபடித்தாய் வைத்துப் பேசுகின்றாயே!

தூதுவன்

நான் எப்படித் தங்களை ஈன்றெடுக்கவில்லையோ அவரும் அவ்வாறே.

எடிபஸ்

தனது புதல்வனென்றே என்னைப் போற்றிப் பாராட்டி வந்தாரே, அஃதெவ்வாறு?

தூதுவன்

என் கரத்திலிருந்து அவர் பெற்ற அன்பளிப்பே நீவிர்.

எடிபஸ்

என்னை அவர் பெற்றெடுக்கவில்லை யெனின் என்பால் அவர் காட்டிய அளவற்ற அன்பு எவ்வாறு பொருந்தும்?

தூதுவன்

அதுவரையில் சேயொன்று இன்றி மனம் புழுங்கிய அவர், உம்மை வாய்க்கப் பெற்றதுமே எல்லையிலாப் பாசத்தை உம்மீது சொரிந்தார்.

எடிபஸ்

இந்தக் குழந்தை ஒரு தொழும்பனிடம் விலைக்கு வாங்கப் பெற்ற ஒன்று, அன்றி அநாதையாய் விடப்பட்டிருந்த சிசுவா?

தூதுவன்

ஸிதரான் மலைமுகட்டின் படுகையொன்றில் உம்மைக் கண்டெடுத்தேன்.

எடிபஸ்

அந்த அடவிப் பாதையின் திடல்களில் நீ சுற்றித் திரிந்தது எதற்கோ?

தூதுவன்

மலைப் பொந்துகளில் மந்தைமேய்ப்பதே என் தொழிலாகும்.

எடிபஸ்

சுற்றித் திரிந்து கூலிக்கு மாடு மேய்க்கும் தொண்டு உனதா?

தூதுவன்

உண்மை அது. ஆயின் அப்பணியில் ஈடுபட்டிருக்குங்கால், குழந்தாய், அந்த நிலையில் உன் ரட்சகனாய் உதவியவன் நானே.

எடிபஸ்

என் ரட்சகனுகவா? எந்த விபத்திலிருந்தோ?

தூதுவன்

உம் கணுக்கால்கள் அதற்குச் சான்று தருமே.

எடிபஸ்

ஐயோ கடவுளே, அந்தத் தொல்காலத் துனி குறித்து இப்போது நினைவூட்டுவானேன்?

தூதுவன்

குத்தித் துளையிட்டு ஒன்ருேடொன்று இறுகக் கட்டியிருந்த கணுக்கால்களின் பிணைப்பைப் பிரித்து விடுவித்த பெருமை என்னைச் சாரும்.

எடிபஸ்

என் கால்களில் காணும் அந்த அருவெறுப்பான வடு என்னுடைய பிறப்பிலேயே தோன்றியதாகும்.

தூதுவன்

அதைச் சார்ந்து அன்று உமக்கு இடப்பட்ட பெயரே இன்றும் திகழ்கின்றது.

எடிபஸ்

அந்தோ! அந்தத் தீங்கை எனக்கு விளைவித்தவர் யாரோ என் தந்தையா, தாயா?

தூதுவன்

அதுபற்றி நான் அறியேன், என்வசம் உம்மை எவன் ஒப்புவித்தானே அவன் நன்கறிதல் கூடும்.

எடிபஸ்

அப்படியென்ருல் என்னைக் கண்டுபிடித்தவன் பிறிதொருவனே, நீ அல்லனே?

தூதுவன்

இல்லை, நானல்லன். மற்றெருரு மேய்ச்சல்காரன் உம்மை எனக்களித்தான்.

எடிபஸ்

யாரோ அவன்? அவனை நீ மறுபடி பார்க்க நேருமாயின் இன்னானென்று அடையாளம் கண்டுபிடிக்க முடியுமோ?

தூதுவன்

லேயிஸ் மனையில் தொண்டாற்றி வந்தவனென்று கருதப் பட்டான்.

எடிபஸ்

பல்லாண்டுகளுக்கு முன் அரசாட்சி புரிந்து வந்தாரே அவர் மனையிலா?

தூதுவன்

ஆம், ஆம், அவரேதான். அவர் இல்லத்துப் புள்ளிட்டங் களை மேய்த்து வந்தவனும்.

எடிபஸ்

அவன் உயிரோடிருக்கின்றானா? அவனை நான் காண வியலுமோ?

தூதுவன்

இதோ, இங்குக் குழுமியிருக்கும் ஊர் மக்களை வினவின் அது குறித்துக் கூற இயல்வர்.

எடிபஸ்

பெருமக்களே, அவர் குறிப்பிட்ட இடையனை இந்நகரிலா யினும், மேய்ச்சல் பரப்புக்களிலாயினும் சரி, அறிந்தவனோ பார்த்தவனோ யாராவது இருப்பின் உடனே விடை பகர்வனாக. என் உள்ளத்தை உறுத்திவரும் விஷயங்களைச் சார்ந்த விவரங் களை இறுதியாகக் கண்டறிவதற்குற்ற தருணம் நெருங்கி விட்டது.

பாணர்

தாங்கள் ஏற்கனவே காணவிழைந்த அந்த அடிமைத் தொண்டனைத்தான் தூதுவன் குறிப்பிடுகின்றானெனக் கருது கின்றேன். இதுபற்றித் தெற்றெனத் தெரிவிக்கக் கூடியவர் மாதரசி ஜொகாஸ்டாவே யாவர்.

எடிபஸ்

எனது அன்பே, பாணர் கூறுவது, நாம் முன்பு அழைப் பிட்டோமே அவனைச் சுட்டுவதாகுமோ ?

ஜோகாஸ்டா

அவன் குறிப்பிட்டது எவனைப் பற்றியாவது இருக்கட்டுமே. அதுபற்றி அறியப் புகுவது வீண் அலைச்சலேயாகும்.

எடிபஸ்

அவ்வாறு கருதற்க. என்னுடைய பிறப்பின் இரகசியத்தை ஐயமற்றறிவதற்குத் துணைக்கருவியாய் உதவக் கூடியதைப் புறக்கணித்தல் தவறாகும்.

ஜோகாஸ்டா

அந்தோ ! உயிர்வாழ உங்களுக்கு ஆசையிருப்பின் இறைஞ் சிக் கேட்கின்றேன், இந்த வீண் சர்ச்சைகளை விலக்குவீராக. நான் அனுபவித்துக் கொண்டிருக்கும் அல்லலுக்கு அளவு ஒன்றில்லையா ?

எடிபஸ்

தைரியத்தை இழக்காதே. மூன்று தலைமுறைகளாக நான் ஓர் இழிகுலத் தோன்றலெனத் தேர்ந்தாலுமே உனது உயர் பிறப்புக்கு மாசு வராது.

ஜோகாஸ்டா

எனக்கு ஆறுதலளிக்க முனைகின்றீர். ஆயின் மீண்டும் மன்றாடிக் கெஞ்சுகின்றேன், உங்கள் ஆராய்வைக் கைவிடுக.

எடிபஸ்

முழு உண்மையையும் நான் காணத் தவறினேன் என்ற பழிச் சொல்லுக்கு இடந்தரேன்.

ஜோகாஸ்டா

உங்கள் நலத்தை நாடுகிறவள் நான். என் அறிவுரையைப் புறக்கணிக்காதிருப்பீராக.

எடிபஸ்

போதும், போதும் நின் ஆர்ந்த அறிவுரைகள். அவை என் பொறுமைக்குப் பொல்லாங்கு இழைப்பவையே.

ஜொகாஸ்டா

தீவினையின் தோன்றலே! உம்முடைய பிறப்பின் நீர்மையை என்றுமே உணராதிருப்பீராக!

எடிபஸ்

(அங்கிருப்போரைப் பார்த்து)

எவனுவது விரைந்தோடி அந்த இடையனை இட்டு வருக. அந்த மங்கை தனது அரச பரம்பரைச் செருக்கில் தலையோங்கித் திகழ்வாளாக!

ஜொகாஸ்டா

வெந்துனியில் தோய்ந்த தீயோனே! இதுவே எனது இறுதி மொழி. இனி உன் முகத்தை ஏறிட்டுப் பாரேன்.

(ஜொகாஸ்டா வெறுப்புற்று மாளிகைக்குள் விரைகின்ருள்.)

பாணர்

எடிபஸ் ஏந்தலே,
வெகு வெடுப்புற்ற வெய்துறல் மீதுர
மறைந்த தேனே, நம்மாதரசி?
ஈண்டு மிகுந்த இப்பேரமைதி
அடர்புயல் தாக்கிற்கறி குறியாமே!

எடிபஸ்

எத்தகைய வெம்புயல் வீசினும் வீசுக, பொருட்படுத்தேன். எக்குலத்தில் உதித்தேனே—அது இழி குலமாயினும் சரி, அதன் உண்மையை உணர்ந்தறியும் ஊக்கத்தைக் கைவிடேன். அதோ சினந்து சென்ருளே அவள், பெண்டிருள் இயல்பிலேயே குடி கொண்ட தன்மூப்பில் திளைத்தவளாய்த் தாழ்பிறப்பு எனதெனக் கருதி எள்ளுகின்ருள் போலும்! நானே, எஞ்ஞான்றும் நலம் நல்கும் நற்பேற்றுத் தேவதையின் அன்புச் சேயன்றே என்னைக் கருதுகின்றேன். என்னை இவ்வுலகில் தோற்றுவித்தது அந்தத் தாயின் கருணையே. இறைவன் படைத்த தண்மதியுமே வளர் வாடுவதும் காண்கின்ரேம். அதுவேபோல் எனது வாழ்வும் பாராட்டுக்கும் பழிப்புக்கும் இரையானதே. என் குலப்பெருமை அவ்வாறிருக்கையில் எனது பிறப்பின் ஊற்றுக்கண்ணை உரை முனைவதில் தவறென்ன? நான் நானேதான்; மாற்றத்திற்கிட மிலதே.

பாணர்

தெளிந்த மனந்தனில் திரண்ட மலரும்
செய்தியைச் செப்பும் சான்றேன் யானே.
நாளை நளிர்மதி, நயன்பட அலருமுன்,
எந்தன் வேந்தனை ஈன்ற தாயே!
சித்திரோன் குன்றே! உன்றன் சீர்தனை
பாடிப் பரவும் விரிந்த வையகம்
அப்பலோ! அருள்வாய் ஆசியை நீயே.
வேய்ங்குழல் இசைக்கும் வித்தகப்பானே
திசைதொறும் திரியும் ஹெர்மிஸ் தானே
அமர அணங்குகள் அன்பிற் பேணிய
நறவுத் தேவனே நவிலவும் இயலேன்
யார் கொல் எடிபஸ் தந்தை யார்கொல்
அன்னவர் யாரோ அறியேன் யானே.

எடிபஸ்

முதியோர்களே, நாம் நெடுநாளாக நாட்டங்கொண்டிருக்கும் மேய்ச்சல் பணியாளன் இதோ அணுகுகின்றனே அவன் தானென ஒருவாறு ஊகிக்கின்றேன். எவ்வாறெனின், இவனைக் குறித்து வெளியிட்டானே அந்தத் தூதுவனுடைய தேய்ந்த கிழத் தோற்றமும் இவனுடைய தோற்றமும் ஒன்றுபோல் காட்சி யளிக்கின்றன. அன்றியும் அவனை இங்கு இட்டு வரும் பணியாட் களும் அதன் பொருட்டு நான் ஏவியவர்களே யாவர். ஆயின் இதுபற்றி நான் உரைப்பதெல்லாம் வெறும் ஊகமே. தொல்காலத் தில் நீங்களெல்லோரும் அவனுடன் நெருங்கிப் பழகியவர்க ளாதலின் என்னைக் காட்டிலும் திண்மையாகக் கூறவல்லீர்.

பாணர்

ஆம், அவனை நான் நன்கறிவேன், லேயிஸ் இல்லத்தில் தொண்டு செய்து வந்தவனுயிற்றே. மேய்ச்சல் பணியாளனே எனினும் கரவற்றவன், நம்பிக்கைக்குரியவன்,

(அந்தத் தொண்டன் நுழைகின்றுன்.)

எடிபஸ்

(கொரிந்தியாவிலிருந்து வந்திருந்த தூதுவனைப் பார்த்து)

என்ன தூதுவனே, முதற்கண் உன்னை வினவுகின்றேன், நீ குறிப்பிட்ட ஆள் இவன் தானே?

தூதுவன்

ஆம், அவனே தான்.

எடிபஸ்

(இடையனை நோக்கி)

என்ன கிழவனே, தலை நிமிர்ந்து நேரே நோக்கி, நான் கேட்டவற்றிற்கெல்லாம் சரியான விடை கூறுவாய்; லேயிஸ் அரசர் கீழ் நீ எப்போதாவது தொண்டாற்றி வந்தாயா?

இடையன்

ஆம், ஒரு பணியாளாக அவர் அரண்மனையில் வேலை பார்த்து வந்தேன். ஆயின் விலைக்கு வாங்கப்பட்ட ஒரு தொழும்பனல்லன் நான். அவர் இல்லத்திலேயே உண்டு வளர்ந்தவன்.

எடிபஸ்

எந்த வகை வேலையில் ஈடுபட்டிருந்தாய்?

இடையன்

பெரும்பாலும் ஆடு மேய்க்கும் பணியே.

எடிபஸ்

உன்னுடைய மேய்ச்சல் பூமிகள் எங்கெங்கு?

இடையன்

ஸிதரான் குன்றங்களும் அவற்றை யடுத்த ஆல்பஸ் மலைச் சாரல்களிலுமேதான்.

எடிபஸ்

அப்படியானால் அதோ நிற்கின்றானே அந்த ஆளை நீ அறிந்திருக்கக் கூடுமே!

இடையன்

எந்த ஆளைப்பற்றிச் சொல்லுகின்றீர்? எந்த வகையில் நான் அவனை அறிந்திருக்கக்கூடும்?

எடிபஸ்

இதோ நிற்கின்றானே இவனைத்தான். நீ எப்போதாவது அவனை அந்நாட்களில் பார்த்திருக்கக் கூடுமே.

இடையன்

தக்கணமே கூறும் வகையில் என் நினைவுக்கு எட்டவில்லை.

தூதுவன்

அப்படி அவன் உரைப்பதில் வியப்பில்லை, அண்ணலே. மங்கிய அவன் நினைவுக்குப் புத்துயிர் அளிப்பேன். ஸிதரான் மலைப்பரப்பில் நாங்கள் இருவரும் தொடர்ந்து மூன்றாண்டுகள் கோடைக் காலத்தில் புள்ளீட்டங்களை மேய்க்கச் சென்றோம். அவருடைய மந்தைகள் இரண்டு, எனது ஒன்று. இலையுதிர் காலம் முதல் கார்காலம் நெருங்கும் வரையில் நாங்கள் இருவரும் ஒருங்குகூடி அங்குக் காலம் கழிப்போம். கார்காலத் தொடக்கத்திலேயே எங்கள் மந்தைகளை ஓட்டிச் சென்று விடுவோம். எனது ஆட்டுப்பட்டிக்கு நான் திரும்புவேன், லேயிஸ் தொழுவத்திற்கு அவன் திரும்பி விடுவான். இவ்வளவு விளக்கிய பிறகு அவனுக்கு நினைவு வராமலாயிருக்கும்? என்ன அப்பா, இதெல்லாம் நிஜந்தானே?

இடையன்

ஆமாம், ஆமாம், இவையெல்லாம் வெகு காலத்திற்கு முன் நிகழ்ந்தவை யெனினும் நீ கூறியதனைத்தும் முழு உண்மை.

தூதுவன்

மற்ருெரு விஷயம் நினைவூட்டுகிறேன். எனது வளர்ப்புப் பிள்ளையாக வைத்துக் கொள்ளும் ஒரு சிசுவை என்பால் அளித்தாயே, நினைவிருக்கின்றதா?

இடையன்

எதற்காக இந்தக் கேள்வி, அது பற்றி இப்போதெதற்கு?

தூதுவன்

நண்பனே, உன்முன் காட்சியளிக்கின்றாரே, அவரே அந்தக் குழந்தை.

இடையன்

வெஞ்சாபத்துக்கு ஆளாவாய், உனது நச்சு நாவை அடக்குவையே.

எடிபஸ்

பதற்று மொழி ஆற்றி அவனைப் பழிக்காதே. அவன் அறைந்ததைக் காட்டிலும் உன் மொழிகளே சிந்தனை நிறைந்தவையாகும்.

**இடையன்**

பெருமையிற் சிறந்தவர்களே, என் குற்றந்தான் என்னே ?

**எடிபஸ்**

அக்குழந்தை குறித்து வினவியதற்கு உற்ற விடையளிக்கத் தவறியதே அக்குற்றம்.

**இடையன்**

வாய்க்கு வந்தபடி அவன் பிதற்றுகின்ருன், வெறும் கயவன்.

**எடிபஸ்**

நடந்ததை நடந்தபடி நவிலத் தயங்குவாயின் உன் நாக்கை நெகிழச் செய்து நிஜத்தைப் பிடுங்குவேன்.

**இடையன்**

இறைஞ்சுகின்றேன், இந்தக் கிழவனை ஏசாதீர்.

**எடிபஸ்**

இந்தக் கயவனைப் பிடித்துக் கட்டிக் கை விலங்கிடுங்கள்.

**இடையன்**

அந்தோ! அந்தோ! நான் இழைத்த பிழைதான் என்னே? என்பால் மேலும் தாங்கள் அறிய விரும்புவது யாதோ?

**எடிபஸ்**

இதோ, இந்த ஆள் குறிப்பிட்ட அந்தக் குழந்தையை இவனிடம் நீ கொடுத்தது உண்மைதானு ?

**இடையன்**

கொடுத்தேன், கொடுத்தேன்; ஐயோ, கடவுளே! அக்கணமே என் உயிர் போயிருப்பின் சாலவும் சிறப்பாயிருந்திருக்குமே!

**எடிபஸ்**

உண்மையை நீ உரைக்க மறுப்பின் அந்த உயிர் இப்போது மாய்வது திண்ணம்.

**இடையன்**

அதை உரைப்பேனுயின் நான் இரு மடங்கு மாய்ந்தவனுவேன்.

எடிபஸ்

இரட்டுற மொழிவதிலேயே இந்தத் தீயோன் இன்னமும் ஈடு படுகின்றான்.

இடையன்

இல்லவே இல்லை, ஐயனே, பல்லாண்டுகளுக்கு முன் இதோ இவனிடம் தந்து விட்டேனென ஏற்கனவே இயம்பினேனே.

எடிபஸ்

அந்த மகவு நீ பெற்றெடுத்ததா, அன்றி உன்பால் ஒப்பு விக்கப்பட்ட ஒன்று?

இடையன்

எனக்குப் பிறந்த பிள்ளையன்று அது, பிறர் ஒருவர் என் கையில் கொடுத்தது.

எடிபஸ்

கொடுத்தவர் இவ்வூர்க்காரரா? அவர் இல்லம் எது?

இடையன்

கடவுள் பொருட்டுமே மன்றாடி வேண்டுகிறேன், என் வாயை மேலும் பிடுங்க முனையாதீர்.

எடிபஸ்

மறுபடியும் உன்னை வற்புறுத்தும் நிலையில் என்னை வைப் பாயாகின் உன் உயிருக்கு ஊறு விளைந்தே தீரும்.

இடையன்

வீண் சீற்றம் எதற்கு? கேட்பீர், அக்குழவி, லேயிஸ் இல்லத்தைச் சார்ந்ததே.

எடிபஸ்

அம்மனையில் தொண்டாற்றும் ஒருவனுடைய குழந்தையா, அன்றி லேயிஸ் வம்சத்தைச் சார்ந்ததா?

இடையன்

அந்தோ! என் வேதனையை என்னென்றுரைப்பது? எது பேசுவதற்கும் என் நாவு நடுங்குகின்றதே!

எடிபஸ்

கேட்டுக் கேட்டு என் செவியும் சில்லிடுகின்றது. ஆயின் கேட்டே தீரவேண்டுமே.

இடையன்

சொல்லியே தீர வேண்டும் போலும், வேறு வழியில்லை. அந்தக் குழந்தை லேயிஸ் வேந்தனின் தோன்றலே என்பது மக்கள் கருத்து. ஆயின் இது பற்றிய ஐயமற அறையக் கூடிய வர் தங்கள் துணைவியே யாவர்.

எடிபஸ்

என்ன, எப்படி, குழந்தையை உன் கையில் ஒப்புவித்தவள் அவள் தானோ?

இடையன்

ஆம், அரசே, அந்த அம்மையேதான்.

எடிபஸ்

எந்த நோக்கத்துடனோ?

இடையன்

அதை எடுத்துக் கொண்டு ஓடி விடும்படி.

எடிபஸ்

தான் ஈன்ற தனையனையேயா?—காதகி!

இடையன்

தீர்க்கதரிசி அறைந்த அவல மொழிகள் கேட்டு அம்மை அச்சுற்றூர்.

எடிபஸ்

அம் மொழிகள் யாவோ?

இடையன்

பிறந்த அக் குழந்தைத் தனது தந்தையையே மாய்ப்பான் எனத் தெய்வ வாக்கு ஒலித்ததாக ஊரில் சொல்லிக் கொண் டார்கள்.

எடிபஸ்

இந்தக் கிழவனிடத்தில் அக்குழந்தையை நீ ஒப்படைத்த தேனோ?

இடையன்

அந்தப் பச்சிளம் சிசுவின்மீது பரிவு கொண்டே அதை அவனிடம் ஒப்படைத்தேன், மன்னனே. குழந்தையை அவன் தனது நாட்டுக்குத் தூக்கிப் போய்க் காப்பாற்றுவானுகை என்பதே எனது உள்ளார்ந்த நோக்கம். ஆயின், அந்தோ, அந்தப் பாதுகாப்பு, சொல்லொணு வெய்துறலில் வீழ்த்திவிட்டது. இந்த மனிதன் சுட்டிய சிசு, நீவிரே என்ருகுமாயின் இறைவனின் இரக்கம் உமக்கு உரித்தாகுக. பருவரலே உருவெடுத்த பிறப்பு உமதாம்!

எடிபஸ்

அந்தோ! தெய்வமே அஞ்சி ஐயுற்றவை அனேயவும் அறவே நிருபணமாய் விட்டன. என் சாபக்கேடான பிறப்பு, முறை கெட்ட திருமணமும் நெறியற்ற புணர்ச்சியும், பிதாவைப் பலியிட்ட மாபாதகமும் இம் மூவகையில் படுகுழியில் பாய்ந்தேனுவன். சுடரொளியே, என் விழிகொண்டு உன்னே நோக்கப் புகுவது இறுதி முறை இதுவே யாகும்.

(எடிபஸ் மாளிகைக்குள் மறைகின்ருர்)

பாணர்

மக்காள்! மாயவாழ்வினே நினேமின்
புவியில் பூக்கும் இன்பமும் போலியே
என்பதை எடிபஸ் எளியோன் அறிந்தனன்
நம் துயர் மண்டிய வாழ்வை உன்னியே
மாயக்கிழவி மதி நலம் வளர்த்த
பிதிரினே அவிழ்த்தே பெருமை சூடிய
கோவே! குலேந்ததே உம்குலப் பெருமைதான்
தாய்தனே மணந்த தனேயன் கொடுஞ் செயல்
காலங் காட்டிக் கவிழ்ந்தது உன்றன் புகழையே
அறற்றுவன் அழுவன் ஆற்றேன் இடர்தனே
ஏனே பிறந்தேன் ஏழையேன் யானே!

(அரண்மனேக்குள்ளிருந்து செய்தி தாங்கிவரும் தூதுவனெருவன் தோன்றுகின்ருன்.)

தூதுவன்

இந்நாடு ஒப்பற்றுப் போற்றும் பெரியோர்களே, ஆழ்ந்தூன்றிய உங்கள் தேசப்பற்றை யாரே ஐயுறுவர்? வேந்தன் ‘லாப்டாகஸ்’ வம்சத்தினர்பால் உண்மை உறவு செறிந்த

உங்கள் செவியில் ஊடுருவிக் கண்ணில் காட்சியளிக்கும் கடுந்துயரை எவ்வாறு சகிக்க இயல்வீர்களோ! இம்மனையில் மண்டிய அழுக்கின் இழிநாற்றத்தை இஸ்டர் நதியின் வெள்ளப் பெருக்கோ, ஃபேபிஸ் ஆற்றின் வாரிவேகமோ அகற்ற இயலாது. இவ்வில்லத்தைக் கவ்வி, மூடிமறைத்திருக்கும்—விரைவில் வெட்ட வெளியாகக் காட்சியளிக்கும்—வெந்துயர்களுக்குக் கணக்கே யில்லை. அந்த விழுமங்கள் வெறுந் தற்செயல் விளைவுகளல்ல, படுபகையின் தாக்குதல்களே. இவையொருபால் நிற்க, தன் தலையில் தானே மண்ணைவாரிக் கொள்வதின் பயனுகத் துன்புறுத்தும் தீங்கின் கடுமைக்கு ஈடு இணையுண்டோ?

பாணர்

ஏற்கனவே நாம்துய்த்த தீவினைகள் எண்ணிலடங்கா;
கண்ணீர் மல்கிக் கதறுகிறோம் ஓலமிட்டு,
அச்சுறுத்தும் அரந்தைகள் மேலுமுண்டோ?

தூதுவன்

சொல்வதற்கும் கேட்பதற்கும் மிகச் சுருக்கமான செய்தி: மாதரசி ஜொகாஸ்டா மாண்டேவிட்டாள்.

பாணர்

அந்தோ, அந்தோ! நற்பேறிழந்த நங்கையே! அவர் உயிர் நீத்த வகையென்ன? அறைவீரே.

தூதுவன்

தனது கரம் கொண்டே மாய்த்துக் கொண்டாள். அக்கொடுங்காட்சி உங்கள் கண்முன் நிகழவில்லையாதலின் அதன் கோரத்தின் கடுமையை உணரவல்லீர் அல்லீர். இருப்பினும், என் சிற்றறிவுக்கு எட்டிய வரையில் விளக்குவதைக் கேட்டு அந்தத் துர்பாக்கியவதியின் விழுமத்தை ஓரளவு தெரிந்து கொள்வீர். கோபாவேசத்துடன் தலைவாயிலைக் கடந்து மாளிகைக்குள் புகுந்ததுமே, தன் இரு கரங்களின் விரல்களால் தலைமயிரை இறுகப் பற்றிக்கொண்டு மணவறையின் சேக்கையை நோக்கி விரைந்தாள். உள்ளே சென்ற தக்கணமே அறைக் கதவுகளைப் படாரெனச் சாற்றிக்கொண்டனள். பல்லாண்டுகளுக்குமுன் மாண்டுபோன தன்கணவன் 'லேயிஸ்' பெயரை ஓலமிட்டு அலறிக்கூவி அவனால் ஈனப்பெற்ற மகன், அந்த மகன்

கையால் அவன் கொலையுண்டது, தன்வயிற்றில் உதித்த அந்த மகனையேஅவள் மணம்புரிந்து மக்களையும் பெற்றெடுத்துச் சாபக் கேடான வம்சபரம்பரையைத் தோற்றுவித்தது, ஆகிய இப்பல நினைவுகள் அவளுள்ளத்தில் அருவிபாயக் கதறினாள்.

மாசுற்ற தனது திருமணத்தின் விளைவாக ஏற்பட்ட இரு வகைச் சந்ததிகளைக் குறித்து அலறிப் புலம்பினாள். தமக்குப் பிள்ளையுமானான் அவனே தன் மணாளனுமானான் என்ற இழிவை நினைத்து நினைத்து வெம்பினாள். இம்மட்டே நான் இயம்ப வியலும். பிறகு எவ்வகையில் தனது உயிரை மாய்த்துக் கொண்டாளோ அறியேன். ஏனெனில், அப்போழ்து வீரிட்டுக் கூவித் துடுமென உட்புகுந்தார் எடிபஸ். எனவே, ஜொகாஸ்டா வின் இறுதி வேதனைகளைப் பார்க்க வொட்டாமல் எங்களை இது தடுத்துவிட்டது. பரபரப்பாக அவர் உள்ளே பாய்ந்ததுமே எங்கள் நோக்கெல்லாம் அவர்மீது படர்ந்தது. இங்குமங்கும் தாண்டு நடைபோட்டார். வாள்ஒன்று அளிக்கும்படி எங்களைக் கேட்டார். என் இல்லாள் எங்குள்ளாள்? இல்லையில்லை, மல்கிய அவள் கருவில் என்னை ஈன்றாள், என் மக்களையும் பெற்றெடுத் தாள்! அவருடைய அணையா சீற்றத்தின்கண் அவர் பாதங் களுக்கு வழிகாட்டியது ஏதோ ஒரு தெய்வசக்தியே போலும்; அண்மையிலிருந்த நாங்கள் யாரும் காட்டவில்லை. யாரோ தம்மைக் கூவி அழைத்ததேபோல் பயங்கரமாகக் கீச்சிட்டு மூடித் தாளிடப்பட்டிருந்த கதவுகளின்மீது பாய்ந்தார். முடங்கியிருந்த தாழ்ப்பாள்களின் நாதாங்கிகளைத் திருகித்தள்ளி அறைக்குள் பாய்ந்தார். கதவுகள் திறக்கப்பட்டதும் நாங்கள் கண்டகாட்சி, சுருக்குமுடி போட்டுச் சுழன்றுகொண்டிருந்த கயிற்றால் அந்த மாதரசி கழுத்தில் தூக்கிட்டுத் தொங்கிக்கொண்டிருந்ததேயாம். அந்தக் கோரக்காட்சி எடிபஸ் கண்ணில் தாக்கியதுமே பேய் பிடித்தவரேபோல் ஊளையிட்டு அவள் மிடற்றில் முறுக்கப்பட் டிருந்த கயிற்றைத் தளர்த்தியவுடன் அந்த அம்மையின் பரிதாப கரமான பிணம் பூமியில் நீட்டிவிழுந்தது. அதைத்தொடர்ந்து நிகழ்ந்ததைக் கூறுவதற்கே குரல் நடுங்குகிறது. எழில்செறிந்து இலங்கிய அவளுடைய மேல் ஆடையைத் தூக்கிப் பிணைக்கும் பொற்கொக்கிகளை உயர்த்தித் தம் விழிகளின்மீது வேகமாகத் தாக்கிக்கொண்டே அவர் ‘பாழ்விழியே, நான் துய்த்த கணக் கற்ற துனிகளும் பிறர்க்கிழைத்த கடுந்தீங்குகளும் உனது பார் வையில் பாய்ந்திருக்கின்றன. இனி எஞ்ஞான்றும் அத்தகைய காட்சிகள் உன் கண்களில் விழா. அறவே பார்க்கக்கூடாத

பலரைப் பார்த்தாய், நான் பார்க்க ஆர்வங் கொண்டவர்களை உணரத் தவறினாய்—இனி என்றும் இப்பாருலகு உனக்குக் காரிருளே' என்று அலறி ஓலமிட்டார்.

அவர்தம் புலம்பலின் பல்லவி அதுவே. இதை ஒலித்த படியே தம் கரத்தை உயர்த்தி உயர்த்தி விழிகளைக் குத்திக் கொண்டே அலமருங்கால் கண்கள் சொரிந்த குருதிவெள்ளம், சொட்டுச் சொட்டாகவன்று, அருவியேபோல் தாடிமீது பாய்ந்து பெருகியது. இருவகைகளிலும் தாக்கிய எவ்வங்கள், கணவன், மனைவிகளாம் இரு பாலரையும் கலவரத்தில் ஆழ்த்திவிட்டது. இவ்வரசகுலத்தின் பரம்பரை மாட்சி இதுவரையில் ஓங்கியே இலங்கிவந்தது. ஆயின் இன்று தொடங்கி வெய்துறல், அலமரல், படுநாசம், மாய்வுகள், நாணக்கேடு, மற்றும் இடும்பையில் எத்தனைவகைகளுண்டோ அவையாவுமே இவ்வில்லத்தில் குடி கொண்டதாகும்.

பாணர்

*அவர் விழுமத்தை விட்டாற்றிக் கொடுக்கும்*
*வகையொன்றை அறிதல் கூடுமோ ?*

தூதுவன்

'யாரேனும் கதவைத் திறப்பீராக. தந்தையைக் கொலை செய்து, பெற்றதாயின்.....(அந்த இழிமொழியை உரைப்பதற்கே நாணுகின்றேன்) அத்தகைய கயவனை தீபன் மக்கள் அனைவரும் நோக்குவாராக' என்றெல்லாம் கதறுகின்றார். பிறர்பால் தாம் சாடிய சாபத்தை இவ்வில்லம் தம்மீது சாற்றும் நிலைமையில் வைத்துக்கொள்ளாமல் தாமே விரும்பி நாட்டைவிட்டு ஓடுவதில் நாட்டம் கொண்டுள்ளார். ஆயின் அந்தோ, அவ்வாறு ஏகுதற் குற்ற வல்லமை அவர் பாலில்லை, வழிகாட்டிச் செலுத்தும் துணை வலியும் காணாது தவிக்கின்றார். அவர்படும் எவ்வத்திற்கு எல்லையேயில்லை. விரைவில் அதை நீங்களே காண்பீர். அதோ, அரண்மனைத் தலைவாயில் தாழ்ப்பாள் திறக்கப்படுகின்றது. துயர் மண்டிய அந்தக் காட்சியைக் கண்டு உள்ளம் கனியாதவர் இருக்கவே முடியாது.

(விழியிழந்த எடிபஸ் பிரவேசிக்கிறார்)

இரைதேடி உலகெங்கும் சூறையிடும் பேயேபோல் உன் மீதிட்டவொரு சாபம் அது—யாரிட்ட சாபமோ ? வாழ்க்கை

முழுவதும் உனை வெந்துயர் வாட்டியதே! நற்பேறு இழந்து நீ நலிவுற்று மதிகெட்டாய். உன்றன் உறு கண்ணைக் கண்ணுற்றுக் காண்பதும் ஏற்பிலதே. கேள்வி பல கேட்டுன்னை விடையறிய விழைகின்றேனெனினுமே நடுக்குற்று ஏகுகிறேன்.

பாணர்

நிகழ்ந்தவை, நிகழ்பவை—இருவகைத் துனிகளையும் தாங்கும் நிலைமையில் கண்ணீர் சொரிந்து ஏங்குவதில் வியப்பில்லை

எடிபஸ்

அன்பு மாறாது இன்னமும் என்மீது நிலையான கனிவு காட்டும் உண்மை நண்பனே, இவ் அந்தகன்பால் உனக்குள்ள பற்றைப் பாராட்டுகின்றேன்; பார்வை யிழந்தேனெனினும் உன் குரல் கொண்டு அணுக்கமாய் என்னுடன் பழகியவன் நீ என்பதை நன்கு உணர்கின்றேன்.

பாணர்

பயங்கரச் செயலாற்றும் அஞ்சா நெஞ்சுடையவரே, உம் விழியை இவ்வாறு இழக்கத் துணிந்ததேனோ? பேயொன்றின் போதனையோ?

எடிபஸ்

நேயர்காள், அந்த அப்போலோ தெய்வத்தின் சாபமே நான் துய்த்த தீவினைகள். ஆயின் என் விழிகளைக் குத்திக்கொண்டது என் செயலே, பிறரிழைத்த தீங்கன்று, செவ்வியதே தோன்று மாறு காணக் கிடைக்காத கண்கள் இருந்தென்ன போயென்ன?

பாணர்

அந்தோ! நீர் உரைத்தது முற்றும் பொருத்தமே.

எடிபஸ்

பரிவுடைய நேயர்களே, பகர்வீர், என் பாசத்தை யார்மீது செலுத்துவது, யாருடைய இன்குரல் என் செவிகளுக்குக் களிப் பூட்டும்? யாவுமிழந்தேன், பன்முறையும் சாபக் கேடானேன், விண்ணோர் வெறுக்கும் மாந்தருக்குள் கேடுகெட்ட மாந்தன் யான்; நாட்டை விட்டென்னை நீக்குவதில் தயைகூர்ந்து விரை யுங்கள், அன்பர்களே.

பாணர்

நீர் புலப்படுத்தும் நிராசை, கை கடந்த உம் துணிவுக்கு ஏற்பானதே. என்றுமே உம்முடன் அறிமுகமில்லாதிருந்திருப்பின் நலமாய் அமைந்திருக்குமே !

எடிபஸ்

அந்த மேய்ப்புத் தரையில் என் கால்களின் கடுவிலங்கை விண்டு மரணவாயிலிருந்து என்னை மீட்டானே, அவன் என் சுடு சாபத்துக்கு உரியவனே. அவன் நோக்கம் நல்லதே எனினும் அது ஏற்பற்ற செயலாய் அமைந்ததே ! அன்று நான் மாண்டிருப்பின், எனக்கும் என் உற்றூர் உறவினர்களுக்கும் ஏற்பட்ட கடுந்தீங்குக்கு இடமிருந்திருக்காதே.

பாணர்

உண்மை. என் கருத்தும் அதுவே.

எடிபஸ்

அவ்வகையில் மாய்ந்திருப்பின், என் தந்தையின் உதிரத்தைச் சிந்தியிருக்க மாட்டேன். என் தாயின் கற்பைக் கறைபடுத்தும் நிலைமை நேர்ந்திராது. கற்பிழந்த கருக்குழியில் தோன்றிய கயவனுனேன். என்னைப் பெற்றெடுத்தவனின் புணர்ச்சிப் படுக்கைக்குப் பொல்லாங்கிழைத்த பாவி யான். இத்தகைய விழுமத்தில் வீழ்ந்த ஒருவனை, இந்த எடிபஸ் போன்ற ஒரு கயவனை—இவ்வியனுலகு கண்டதுண்டோ ?

பாணர்

இதுபோன்ற நிலைமையில் தங்கள் புத்தியைச் செவ்வனே பயன்படுத்தவில்லை யென்றே உரைப்பேன். கண்ணிழந்து வாழ்வதினும் மாய்வதே மேலாகும்.

எடிபஸ்

நான் செய்யத் துணிந்தது செவ்வியதே என்பது என் கருத்து. எனது உரமான நம்பிக்கையைத் தகர்க்க வியலாது. நமது வாய்ப்போர் ஓய்வதாக. என் பார்வையை அழிக்காமலிருந்திருப்பேனுயின், நாணங்கெட்ட விழிகொண்டு நிரயத்தில் என் தாய் தந்தையர் முகத்தில் விழிக்க நேருமே. அந்தோ, என் அன்னையே, உங்களிருவர்க்கும் நான் இழைத்த தீங்கிற்கு

எத்தகைய தீய தூக்கு மரமும் சாலுவதன்றே. ஈன்ற சேய்களைக் கண்ணுற்றால் பெற்றோருள்ளத்தில் உவகை ஊட்டுமே என்று சொல்லக்கூடும். இழிமுறையில் யான் பெற்ற பிள்ளைகளையா ? எஞ்ஞான்றும் மகிழ்ச்சி தலைகாட்டாதே. எழில் மிக்க இந்நகர், தூபிகள் செறிந்த அதன் திருக்கோயில்கள், ஆங்கு எழுந்தருளி யிருக்கும் தெய்வங்களின் புனிதப் பிரதிமைகள், இவையாவும் ஒருகாலத்தில் என் உள்ளத்தை ஊடுருவிக் கவர்ந்தவையே. மாந்தர்களில் ஒப்பற்ற மாந்தன் என்று தீபன் மக்களால் போற்றப்பட்ட காலம் அது. ஆயின் இப்போதோ! தீயோர் பால் நானிட்ட சாபம் என்னையே தாக்குகின்றது. மாசு மலிந்த நான் வானோர் வெறுப்புக்கு ஆளானேன். லேயிஸ் வம்சத்தைக் குலைக்கும் கோடரிக்காம்பானேன். பாதகன் என என்னை நானே பழித்துக்கொள்ளும் இந்நிலையில் உங்கள் முகத்தை நோக்கும் துணிவுமுண்டோ ? எனது செவிப்புலனின் ஊற்றுக் கண்ணை அடைப்பதற்கு வழியொன்று வகுக்க இயல்வே னுயின், பார்க்குந்திறனோ கேட்குந்திறனோ நீங்கிய நிலைமை யில் இப்பாழுடல் ஓர் இருட்டறைக்கு ஒப்பாகும். துயர் எட்டுவதற்கு வசதியில்லாத வட்டத்தில் வதிவதே ஒரு தனிப் பாக்கியமெனலாம். ஸிதரோன் குன்றமே, ஏன் எனக்குத் தஞ்சம் அளித்தனையோ ? அக்கணமே என்னை மாய்த்திருப்பின் நான் எங்குப் பிறந்தேனோ, யாருக்குப் பிறந்தேனோ என்பவை பற்றியெல்லாம் உலகம் அறிந்திருக்காதே ! 'பாலிபஸ் புரவலனே'—காரிந்த் மாநகரே, என் மூதாதையரின் தொல்கால உறைவிடமென உன்னைப் பாராட்டுகின்றார்கள் ; உன் அன்புக் குழந்தையாகவே நான் ஊட்டி வளர்க்கப்பெற்றதாக போற்றினீரே ; ஆயின் என் உதிரத்தில் ஊன்றியிருந்த விழுப் புண்ணை யாரே அறிவர் ? எனது இழிபிறப்பின் உண்மை இப்போது வெட்டவெளியாய் விட்டதே. முவ்வத்தங்கள் முடுகும் முறை வெளியே, கரந்துறையும் குறுங்காடே, என் கரங் கொண்டே என் தந்தையின் குருதியைக் குடிக்குமாறு செய்தீர்களே ; அஃது என் இரத்தத்தை நானே உறிஞ்சிய வாறுமன்றோ ? அவ்வமயம் உங்கள் கண்முன் நானிழைத்த தீச்செயல் உங்கள் நினைவில் நிற்கக்கூடுமெனக் கருதுகின்றேன். அதைத் தொடர்ந்து தீபன் நாட்டுக்கு நான் ஏகியதுமே அங்கு நான் மேலும் ஆற்றியவெவ் வினைகளோ என்னென்றுரைப்பது ! திருமணத்தின் தீவினையை என்னென்று இயம்புவது. அதன் விளைவாக நான் பிறந்தேன், என்னைப் பெற்றவளுக்கே

மாலையிட்டு நெறிகெட்ட புணர்ச்சியால் மகவுகளை ஈன்றேன். எனவே, நான் மகனுக்கு மகன், கணவனுக்குக் கணவன், தந்தைக்குத் தந்தை, உடன்பிறந்தார்க்கு உடன் பிறந்தோன் ஆகிய இப் பல்வகையிலும் மாசுற்றேன். மாசுற்ற பரம்பரைக்கு மூலவனுனேன். இதனினும் வெவ்வினையே உலகில் காண வியலுமோ? அன்பர்களே, கடவுள் சார்பில் மன்றாடிக் கேட்கின் றேன்; கடுகுவீர், நாட்டிற்கப்பால் தொலைதூரத்தில் என்னைக் கடத்திச் செல்வீர். அன்றி ஈண்டே கொலை புரிவீர்; இல்லை யெனின், எவர்விழியிலும் விழாத வகையில் ஆர்கடலில் வீசியெறி வீராக. அணுகுங்கள். இந்த அனுதையின்மீது தயை கூர்ந்து கைகொடுங்கள். செவிசாய்ப்பீர், என்னைப் பிடித்த வெவ்வினை யின் கடும்பிணி என்னையொருவனையே வாட்டும். அச்சுறுதீர்.

(க்ரியான் பிரவேசிக்கின்றுன்)

மக்கள் தலைவன்

இதோ க்ரியான் வந்துள்ளார். தக்க தருணமே, செய் வகையிலோ, நல்லுரை வாயிலாகவோ, தங்கள் விருப்பத்தை ஈடேற்ற வல்லவர் அவர் ஒருவரே. உமது மறைவுக்குப்பின் இந்நாட்டைப் பாலிக்கும் பொறுப்பு அவரையே சாருமன்றோ?

எடிபஸ்

அவரை விளிக்கும் வகையறியாது திணறுகின்றேன். என் மொழிகளை அவர் மதிப்பதற்குற்ற நல்லுறவை இழந்தேன். அவருடைய வெம்பகைமைக்கு ஆளாகும் வகையில் நடந்து கொண்டேனன்றோ?

க்ரியான்

பெரியோரே, தங்களைப் புண்படுத்தும் நோக்கத்திலோ, அன்றி, முன்பு என்மீது சாற்றிய பழியைக் கண்டிக்கும் கருத் திலோ நான் இப்போது இங்கு வரவில்லை.

(அங்கங்கு குழுமியிருந்தவர்களைப் பார்த்து)

அச்சமோ, நாணமோ உங்களுக்கில்லையா? மாந்தர்க்குரிய ஒழுக்கத்தை நீங்கள் புறக்கணித்தாலும், கதிரொளியைச் சொரிந்து பாருலகைப் பேணிக் காக்கும் பரிதிக் கடவுளைப் போற்றி வணங்கும் பண்பையும் கைவிட்டீர்களா! மண்ணுலகோ, விண்ணோரோ சகிக்கமுடியாத கோரக்காட்சியை வெட்டவெளி யாகப் பல்லோர் உற்றுநோக்கும் வகையில் விட்டுவிடுவது

ஏற்பாகுமோ ? தக்கணமே அவரை இல்லத்துள் இட்டுச் செல் லுங்கள். ஒருவனின் அலமரலைக் கேட்பதற்கோ காண்பதற்கோ உரியவர் அவனுடைய சுற்றத்தாரேயன்றிப் பிறரில்லை.

எடிபஸ்

செவி சாய்ப்பாய், க்ரியோனே, துடுமென இங்கு நீ ஏகியது, இம்மியும் எதிர்பாராத மகிழ்ச்சியின் அதிர்ச்சியை என்னில் கிளறியுள்ளது. நானோ ஓர் ஈனன், உயர்குணமே உருவெடுத்தவன் நீயாவாய். ஒரு சிறிய விண்ணப்பம், மனமு வந்து ஏற்பாயாக. அது என்பொருட்டன்று, உனது நலனையே சார்ந்ததாகும்.

க்ரியான்

என்னைக் கெஞ்சிக் கேட்கும் அந்த உதவியாதோ ?

எடியஸ்

இந்நாட்டு எல்லையிலிருந்து சிறிதும் தயக்கமின்றி என்னை வெளியேற்றுவாயாக ; மக்கள் வாசனையே இல்லாத விரிந்த ஒரு பாலைவனத்தில் புகுத்திடுவாய்.

க்ரியான்

தங்களை நாடு கடத்தல் ஏற்கனவே துணிந்த முடிவாகும். என்றாலும் முதற்கண் ஆண்டவன் ஆணையை யறிந்து அதற் கேற்ப நடந்து கொள்வது உகந்ததெனும் முடிவுக்கு வந்துள் ளேன்.

எடிபஸ்

அந்த ஆணையின் பொருள் ஏற்கனவே தெரிந்த ஒன்றன்றோ ? பிதுர்க்காதகனை, பாதகனை அழித்து விடுவதே இந்த ஆணை—அத்தகைய இழியோன் யானேயாவன்.

க்ரியான்

ஆம், ஆண்டவன் அப்போது அறைந்தது அவ்வகைத்தே. எனினும் ஈண்டுள்ள நிலைமையைக் கருதி மீண்டும் கடவுளைக் கலந்து முடிவுக்கு வருவது சால்பாகும்.

எடிபஸ்

இந்தக் கயவனைக் குறித்துக் கடவுள் கருத்தை அறியத் துணிவதா ?

க்ரியான்

இந்நிலையில் இறைவன் இடக்கூடிய ஆணையின் வகை உமது பாராட்டுக்கும் ஏற்பாகுமென்பது திண்ணம்.

எடிபஸ்

அவ்வாறிருத்தல் கூடும். எனினும் உன்னைப் பணிவுடன் இறைஞ்சுகின்றேன், நான் சாற்றும் பொறுப்பை ஏற்பாயாக. உள்ளறைக்குள் உயிர் நீத்து வீழ்ந்து கிடக்கும் அன்னுருக்குச் சவச் சடங்கை விதிப்பாயாக; உன் உடன் பிறந்தாள் என்ற முறையில் அதை மேற்கொள்வது உன் கடமையாகும். என்னைச் சார்ந்தவரையில், என் முன்னோர்கள் புகழுடன் வாழ்ந்த இந்தத் தீப்ஸ் நகரை எனது இழி வாழ்க்கையால் மாசுபடுத்தா மலிருப் பேனுக. அதோ, அந்தத் தொலைவில் காட்சியளிக்கும் ஸிதரான் குன்றங்களில்—பண்டைய நிகழ்ச்சிகளைக் கொண்டு என்பெயரில் திகழும்—அந்தக் குன்றங்களில் எனது வாழ்நாள் முடிவதாக. என் தாய் தந்தையர் உயிர்த்திருக்கையிலேயே என்னை மாய்க்கத் துணிந்து எனக்கெனத் தீர்மானித்த கல்லறை ஆங்கேயன்றோ? ஒன்று திண்ணம், நோய்வாய்ப்பட்டோ வேறு ஏதேனும் தற் செயல்தாக்கின் விளைவாகவோ என் உயிர் நீங்காது; ஆண்டவன் விதித்த விதியை யொட்டியே என் முடிவு நேரும்.

அது நிற்க, தெய்வம் விதித்த விதி என்னை எந்தத் திக்கில் ஈர்த்துச் சென்றுலும் செல்லட்டும்; நான் பொருட்படுத்தவில்லை; என் நினைப்பெல்லாம் இரக்கத்திற்குற்ற என்னுடைய குழந்தை களைப் பற்றியே—ஆயின் என் ஆண்பிள்ளைகளைப் பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை, க்ரியானே; அவர்களும் மனிதப் பிறப்புதானே; எங்கிருந்தாலும் எப்படியாவது தங்களைக் காப்பாற்றிக்கொள்வார்கள். எனது அச்சமெல்லாம் என்னுடைய திக்கற்ற இரு பெண்குழந்தைகளைப் பற்றியே. நான் உண்டிக்கு அமரும்போதெல்லாம் என்னுடனமர்ந்து நான் உண்பதை உண் பார்கள், பருகுவதைப் பருகுவார்கள். அவர்கள் பொருட்டு உன்னை வேண்டுகின்றேன், அன்பனே; தக்க ஆதரவு அவர்கட் களிப்பாயாக. ஒருமுறை என் கரத்தால் அவர்களைத் தழுவிப் புலம்ப வழிவகுக்குமாறு இறைஞ்சுகின்றேன், மாண்புடைய மன்னனே, மீண்டும் மீண்டும் வேண்டுகின்றேன். என் மக்க ளாகிய அவர்களைத் தொடும் வாய்ப்பைப் பெறுவேனுயின் கண்கொண்டு பார்த்தபோது உண்டான மகிழ்ச்சி விளையத் தவருது.

(க்ரியானுடைய பணியாட்கள் எடிபஸ் சேய் களாம் ஆண்டிகனியையும் இஸ்மெனியை யும் இட்டு வருகின்றனர்)

ஆஹா ! கடவுளர்களே, என் செவியில் ஒலிக்கும் தேம்பல் என் செவ்விய சேய்களுடைய தேவா ! என்மீது கருணை காட்டி, க்ரியான் இவ் அருஞ்செயலுக்கு ஆக்க மளித்தானு? என் செல்வச் சிறுமிகளே ! என் உணர்வு உண்மைதானு ?

க்ரியான்

உண்மை, முற்றிலும் உண்மை. தாங்கள் இந்த நிகழ்ச்சி யைத் துய்க்க வழிவகுத்தவன் நானே. அவர்கள்பால் தமக் கிருந்த பாசத்தின் பெருமையை நன்கறிவேனன்றோ ?

எடிபஸ்

ஆண்டவன் அருள் உனக்கு உரித்தாகுக ! இக்குழந்தைகளை இங்கு நீ இட்டுவந்த பரிவுச் செயலுக்குற்ற கைம்மாறு கடவுள் பால் உனக்குக் கிட்டியே தீரும். வானேர் என்மீது சொரிந்த கைப்புக்கு மாருக உன்மீது அமுதத்தைப் பொழிவாராக. என் அன்புச் சேய்களே, எங்குச் சென்றீர் ? இக்கைகளால்—உடன் பிறந்தான் கைகள், தகப்பன் கைகள், அந்தோ இருமொழியும் பொருந்துமே ! அன்றியுமே, துடுக்காகக் கண்களைக் கொத் தித் துவக்கமான விழிகளை இருளடையச் செய்த கரங்கள், தன்னை ஈன்றவளையே நாயகியாகக் கொண்டு உங்களைப் பெற்றெடுத்த பேதையின் கரங்கள்—இப்புல்லிய கரங்களால் உங்களை அரவணைக்க விழைகின்றேன். என் கண்மணிகளே, உங்களைக் கண்கொண்டு நோக்கும் திறமிழந்தேனெனினும் உங்கள் வருங்கால வாழ்க்கையின் விழுமங்களைச் சிந்திக்கச் சிந்திக்க என் கண்ணீர் அருவி பாய்கின்றது. இழிமொழிகள் அறைந்து மக்கள் உங்களைப் பழித்தல் தவருது. விருந்தொன்ருே தூய சடங்கொன்ருே எதில் நீங்கள் பங்குகொள்ளப் புகுந்தாலும் மகிழ்ச்சி காணீர் ; நாணமிழந்து, கண்ணீர் மல்கி இல்லம் மீள்வீர். என்பால் தோன்றிய உங்கள்மீதும் நீங்கள் ஈனும் சேய்கள் மீதும் வீசும் பழிப்பைப் புறக்கணித்து உலகறையும் அவச் சொற்களுக்கு அஞ்சாமல் உங்களுக்கு மாலையிட யார் துணிவர் ? உண்மை நோக்குங்கால், நமக்குற்ற கயமைக்குக் கரையில்லை. —' இம்மங்கையர்தம் தந்தை தனது தந்தையைக் கொன்ருன் ; தன் தாயின் கருவைக் கறைபடுத்தி இம்மகவுகளைப்

பெற்றெடுத்தான்.' இவ்வாறெல்லாம் நிந்திக்கப் புகுவார்கள். இயலாது, இயலாது; உங்கள் கைத்தலம் பற்றுவோர் காண்ப தரிது, குழந்தைகளே! மணவாழ்க்கை யிழந்து, மலடிகளாய் மனம் புழுங்கி வாடுவதே உங்கள் விதிபோலும். மாண்புடைய 'மெனுகஸ்' மைந்தனே, உனது ஆதரவை நாடுகின்றேன். தந்தையேபோல் இவர்களைப் பேணிக் காப்பது உனது பொறுப் பாகும்; இயற்கைத் தாய்தந்தையரின் ஆதரவை இழந்தவர்கள். உன் சுற்றத்தைச் சார்ந்த இவர்கள் ஏழ்மையில் உழன்று கன்னிப் பெண்களாய் வாழ்க்கையை வெறுக்காமல் காப்பாயாக. துனி தோய்ந்த என் இழிவாழ்வு அவர்களைச் சாராதிருப்பதாக. பச்சிளங் குழந்தைகள், இரக்கம் காட்டுவாய். உன்னையன்றி வேறொரு துணைவலியும் அறவே அற்றவர்கள். உன் பரிவை ஆணையிட்டு உறுதி செய்வாயாக. என் அன்புச் சேய்களே, பல பொருள்பற்றி உங்களிடம் சொல்லக் கருதினேன், ஆயின் அவற்றைச் செவ்வனே நுகரும் நீர்மை உங்கள் பசுமையில் இன்னம் புலரவில்லை. சுருக்கமாக நான் அளிக்கும் அறிவுரை இதுவே: ஏதோ ஒருவிதத்தில் குடித்தனத்தை நிறுவிக்கொண்டு மனவமைதியுடன் வாழ முனையுங்கள். உங்களுடைய வாழ்க்கைத் தரம் நான் துய்த்ததற்கு மாருகச் சிறப்பாய் அமைவதாக.

க்ரியான்

தங்களுடைய புலம்பல் சாலுவதாகும். இல்லத்துள் ஏகுவீர்.

எடிபஸ்

இனிமைக்கு அங்கு இடமில்லையெனினும் உன் ஆணைக்குப் பணிந்தாக வேண்டும்.

க்ரியான்

வீணே விம்மிப் பயனென்? காலத்திற்குற்றவாறு நடக்க வேண்டியது நடந்தே தீரும்.

எடிபஸ்

சரி, உன் சொற்படி இணங்குவேன், ஆயின் ஒரு நிபந்தனை.

க்ரியான்

அது யாதோ?

எடிபஸ்

இந்நாட்டைவிட்டு என்னை நீக்கவேண்டும்.

க்ரியான்

விண்ணோர்க்குச் செய்யவேண்டிய விண்ணப்பம் அது, எனக்கன்று.

எடிபஸ்

விண்ணோர் வெறுப்புக்கு உள்ளானவன் நான்.

க்ரியான்

அவ்வாருயின், உற்றகாலத்தில் உம் விருப்பம் நிறைவேற்றப்படும்.

எடிபஸ்

எனவே, நான் விழைவதை நடத்தி வைப்பாய் என்ருகுமன்ரே?

க்ரியான்

சொல் ஒன்று, செயல்வேறு என்பது என் இயல்பில்லை.

எடிபஸ்

ஆகவே, என்னை உன் எண்ணத்திற்கேற்ப இட்டுச் செல்வாய்.

க்ரியான்

உள்ளே ஏகுவீர்—குழந்தைகளைப் போகவிடுங்கள்.

எடிபஸ்

வேண்டாம், என்னைவிட்டு அவர்களைப் பிரிக்காதிருப்பாய்.

க்ரியான்

ஒவ்வொரு துறையிலும் ஆதிக்கத்தைச் செலுத்த முனையாதீர். அந்த அதிகாரப் பான்மையே உம் இழிவுக்கும் அழிவுக்கும் அடிகோலியது.

**பாணர்**

தீபன் நாட்டு நெடுநாள் மக்களே,
மாண்புடன் திகழ்ந்த எடிபஸ் காண்பீர் ;
புதிரைப் புகுத்திய பேயைப் புடைத்துப்
புகழோங் கிலங்கிய புரவலர் இவரே.
அவர்தம் ஆண்மையை ஆய்ந்த பலரும்
போற்றித் துதித்து வியப்பில் ஆழ்ந்தனர்.
ஆயின், அந்தோ!
ஈண்டவர் துய்க்கும் ஈறிலாத் துயரம்
காண்போர் மனத்தைக் கருகச் செய்யுமே.
மனிதப் பிறவி யெடுத்தோர்க்கெல்லாம்
மரணம் திண்ணம், மறப்போர் யாரே?
எனவே,
இஃதே வென்று இறைவன் விதித்த
இறுதி நாளை நம்முடைக் கண்கள்
நோக்கக் கருதி நிற்குங்காலை,
நோயும் துனியும் அறவே நீங்கி
வாழ்க்கை வரம்பைக் கடக்கும் வரையில்
நற்பேற்றவனென எவனையுமே நாம்
நவிலத் துணிதல் நாணுவதற்கிடமே.

# குறிப்புக்கள்

அத்தினு (Athenia): கிரேக்கர் போற்றிய தேவி. ஞானம், கலை, தொழில், போர் நுட்பம் ஆகிய துறைகளுக்கு அதி தேவதை.

அப்போலோ (Apollo): கிரேக்க தெய்வம் : ஒப்பற்ற எழிலுடையோன். இசை, பிணி தீர்த்தல், வருங்கால விளைவை யறிதல் இவை இந்தத் தெய்வத்தின் தனிச் சிறப்பு.

ஃபீபஸ் (Phoebus): அப்போலா தேவனின் மறுபெயர்.

பர்னஸ் (Parnassus): டெல்பிக்கு அண்மையிலுள்ள ஒரு மலை—தேவ கன்னிகைகளும் அப்போலோ தேவனும் நடமாடும் தலம்.

டெல்ஃபி ஆலயம் (Delphi): கீரிஸ் தேசத்து வடபகுதியில் அப்போலோ தெய்வம் கோயில் நகரம்—வருங்காலம் உரைப்பதில் புகழ்பெற்றுத் திகழ்ந்தது. அத்தெய்வத்தைச் சார்ந்த பல்வகை விளையாட்டுக்கள் அங்கு நிகழ்வதுண்டு

ஜுஊஸ் (Zeus): பண்டைக்கால கிரேக்கர் தொழுத கடவுளரில் முக்கியமானவர்.

ஹெர்மிஸ் (Hermes): ஒரு குட்டி தேவதை. கடவுளர்களுக்குத் தூதுவன்.